# ஒட்டக்கூத்தரின்

# ஈட்டி எழுபது





கவிஞர். பெ. வேலு எம்.ஏ., பி.எட்.

# ஒட்டக்கூத்தரின்
# "ஈட்டி எழுபது"

புலவரேறு பெ. வேலு எம்.ஏ., பி.எட்.,
குறிப்புரையுடன்

தமிழ்ச் சங்கம்
தாரமங்கலம், சேலம் மாவட்டம்

## தகவல்கள்

| | | |
|---|---|---|
| தலைப்பு | : | ஒட்டக்கூத்தரின் சட்டி எழுபது |
| மொழி | : | தமிழ் |
| வெளியீடு | : | தமிழ்ச்சங்கம், தாரமங்கலம் |
| குறிப்புரை ஆசிரியர் | : | புலவர் பெ. வேலு எம்.ஏ.பி.எட் |
| பக்கங்கள் | : | |
| விலை | : | ரூ 5-00 |
| பயன்படுத்திய எழுத்து | : | 11 பாயின்ட் |
| தாள் | : | 10.9 |
| அளவு | : | 18×12.5cm. |
| பதிப்பு | : | முதல் பதிப்பு, 1981, ஏப்ரல் |
| அச்சிட்ட நூல்கள் | : | 1100 |
| ஓவியம் | : | வேலவன் |
| கிடைக்குமிடம் | : | புலவர். பெ. வேலு<br>எம்.ஏ. பி.எட்<br>செயலர்<br>தமிழ்ச் சங்கம்,<br>தாரமங்கலம்–636502 (சேலம்) |
| அச்சிட்டோர் | : | மூவேந்தர் அச்சகம்,<br>சென்னை–14. |

# என்னுரை

கொங்கு நாட்டுத் திருத்தலங்களில் சிற்பம் மணக்கும் சிறந்த ஊர் தாரமங்கலம். எந்த நேரமும் கைத்தறிகளின் ஓசை காதுகளில் ரீங்கார மிடும் இவ்வூரில் கடந்த மூன்றாண்டுகளாகத் தமிழோசை கேட்டபடியே உள்ளது. இளைஞர்கள் முன் வந்து இலக்கியச் சமூகப் பணி புரியும் தமிழ்ச் சங்கம் தரும் சித்திரை விழாவில், ஒட்டக்கூத்தரின் புகழ் சொல்ல வேண்டும் என்றும் எண்ணம் உரு வாகியது. எண்ணத்தைத் தந்து, செயல் புரிய வேண்டும் என்று தூண்டியவர் இவ்வூர் நாட்டாண் மைக்காரரும் கார்த்திகேயா திரைப்பட அரங்கம், கார்த்திகேயா பஸ் அதிபருமான திருமிகு கே. எஸ். எல்லப்ப முதலியார் அவர்கள். அவரோ கம்ப னுக்குச் சடையன் போல 'எங்களுக்குக் கிடைத்த எல்லப்பர்.' ஒட்டக்கூத்தரின் ஈட்டி எழுபதைப் பதிப்பு ஆக்குங்கள் என்றுரைத்து உரியன முதலில் செய்த அவர்க்கு எல்லா நலனும் விளைய செந்தூர் வடிவேலனைச் சிந்திக்கின்றோம். செங் குந்தர் புகழ் உரைத்த செந்தமிழ் வித்தகர் ஒட்டக் கூத்தர் பற்றிய நூல் தர வேண்டும் என்னும் செய லுக்குத் தன் கரத்தால் தூண்டுதல் நடத்தியவர் திருமிகு வனவாசி பொ. ப. சண்முக முதலியார் அவர்கள். அவரையும் எங்கள் தமிழ்ச் சங்கம் பல்லாண்டு வாழ்கவென வாழ்த்துகின்றது.

இப்பணியைச் செய்து முடிக்க எனக்கு ஆணையிட்ட, தமிழ்ச் சங்கத் தலைவர் திருமிகு தா. ஆ. பெரியசாமி உள்ளிட்ட செயற்குழுவை வணங்குகின்றேன். சுமார் 25 ஆண்டுகட்குப் பிறகு இந்நூல் மீண்டும் அச்சு வாகனம் ஏறுகிறது. செங்குந்தர் பிரபந்த திரட்டு பதிப்பித்த காஞ்சி நாகலிங்கனாரை நன்றியோடு நினைவுகூர்கின்றேன். அவர்கள் பாதை அமைக்கவில்லையாயின், நம் பாதம் இவ்வளவு தெளிவாக நடை போடாது.

எனக்குப் பழந் தமிழ் நூல்களில், சுவடிகளில் நாட்டத்தை உருவாக்கி சுவையான திசையைச் சுட்டிக் காட்டி வருபவர் மல்லைக் கவிஞர் ந. கந்தசாமி அவர்கள். தன் பிள்ளையைப் போல என்னை அரவணைத்து அருந்தமிழ் சொல்லும் அவரது அன்பு நான் எடுத்து வைக்கும் ஒவ்வோர் படிக்கும் படிக்கல் போன்றதாகும். 'கொங்கு நாட்டு உ. வே. சா அவர்களை நன்றியோடும் நெகிழ்வோடும் வணங்குகின்றேன். இந்நூலைச் செப்பம் செய்யத் துணை நின்றவர் என் இளவலாய் இலக்கியத்தில் நிற்கும் புலவர் ஆ. பெரியசாமி பி. லிட்., அவர்கள். அவருக்கும் நன்றி. ஒட்டக்கூத்தரின் ஓவியம் வரைந்த அன்பர் திரு வேலவருக்கும் நன்றி.

இந்நூலில் கிடைக்கும் சிறப்புக்கள் யாவும் இத்துறையில் ஏற்கனவே உழைத்துச் சென்ற பெருமக்களுடையது. குற்றங்குறைகள் இருப்பின்

அவை என்னால் விளைந்தவை. அறிஞர் பெருமக்கள் சுட்டிக் காட்டுவார்களேயானால் நன்றியோடு ஏற்றுக் கொள்வேன். ஒட்டக்கூத்தரின் புகழ் பரப்பும் திரைப்பட நடிகர் மதிப்பிற்குரிய மனோகர் அவர்கள் நடிக்கக் காணும் பெருமைகளில் சில இந் நூலில் படிக்கக் காண வைத்துள்ளேன். செங்குந் தர் குலப் பெருமையோடு மட்டுமல்லாது செந் தமிழ்ப் புகழ் பரப்பும் இவ்வீட்டியெழுபது என்னும் நூலைச் சிறப்பாகச் செங்குந்தப் பெருமக்களும் பொதுவாக இலக்கிய அன்பர்களும் ஆதரித்துச் சிறப்பளிக்கக் கேட்டுக் கொள்கிறேன். இப்பணி யில் என்னை ஈடுபட வைத்த செவ்வேள் திருக்கரத் திருக்கும் சிறந்த வேலை எந்நேரமும் சிந்திக் கின்றேன்.

அன்பன்

பாரதி இல்லம்
தாரமங்கலம்

பெ. வேலு

"வல்லாணை ஒழிப்பதில் தியாகம் புரிந்த
செங்குந்தர்களின் வழித்தோன்றலாய் வந்து
ஆங்கிலேய வல்லரசு ஒழிய தன்
இன்னுயிரைத் தந்த கொடி காத்த திருப்பூர்
குமரனின் திருவடிகளுக்கு இந்த நூல் மலர்
காணிக்கையாகிறது."

—தமிழ்ச்சங்கம், தாரமங்கலம்

# ஒட்டக்கூத்தர் வரலாறு

'கல்விக் கரசு கவிராஜ சிங்கம் கலைச்சலதி
வில்விக்கும் வாட்கை யபயர் சஞ்சீவி விமலமூர்த்தி
புல்விக்கு மாகமப பொக்கிசம் வேதப்புயல் கமலச்
செல்விக்குச் சேய்ஒட்டக் கூத்தனல்லாற் புவிசெப்பரிதே.

இன்னொரு முறை இப்பாடலைப் படித்துப் பாருங்கள்' ஒரு கவிஞர் இன்னொரு கவிஞருக்கு மனந்திறந்து கூறி இருக்கும் பாராட்டு மொழிகள்தான் எத்தனை? நாகை முத்துக் குமார தேசிகரின் செங்குந்தர் கலித்துறை மாலையில் ஒட்டக்கூத்தரைப் பற்றிப் பாடியுள்ள பாடல்களில் ஒன்று இது. கமலச் செல்விக்குச் சேயாக இருந்து, தமிழ்த் தாயின் கருணைக் கண்களால் வளர்க் கப்பட்ட கவி ஒட்டக்கூத்தர் ஒரு பெரிய காலக் கட்டத்தின் அடையாளம். வரலாற்றின் வழிகாட்டி. செங்குந்தர் சமூகத்தின் பெருமைத் தீபத்தைப் புகழ்க் குன்றில் ஏற்றுவித்த உயர் புலவர்.

நம் தமிழகத்தின் மிகப் பெரிய குறை தமிழ்ப் புலவர்களின் வரலாற்றைத் திட்டவட்டமாகக் கூறு வதற்கு இயலாத நிலை. 'என்பாரும் உளர்...' என்பது தான், நம் வரலாற்று ஏடுகளில் மலிந்து கிடக்கும் மகத் தான வரிகள். காலமும் சரியாகத் தெரியாமல், இடமும் முறையாகப் புரிந்துகொள்ள இயலாமல் இருக்கும் நிலை நம் கவிஞர் ஒட்டக்கூத்தருக்கும் அப்பாற்பட்டதல்ல. இருந்தாலும் இங்கொன்றும் . அங்கொன்றுமாகக்

கிடைக்கும் செய்திகளைக்கொண்டு கூத்தர் பெருமானின் வரலாற்றைக் காண்போம்.

**சென்று செவியளக்கும் செம்மையவாய்ச் சிந்தையுளே**
**நின்றளவில் இன்பம் நிறைப்பவற்றுள் ஒன்று**
**மலரிவரும் கூந்தலார் மாதர் நோக்கொன்று**
**மலரிவரும் கூத்தன்றன் வாக்கு.**

இது தண்டியலங்காரமென்னும் தண்டமிழ் இலக்கண நூலில் எடுத்துக் காட்டாக வரும் பாட்டு. செவியை அளந்து காணவும், சிந்தையை நிறைக்கவு மாக உள்ள பொருள்கள் உலகில் இரண்டு. ஒன்று மலர்சூடிய கூந்தலையுடைய மடமங்கையர் பார்வை. இன்னொன்று மலரி என்னும் ஊரில் தோன்றிய கூத்தரது கவிதை. இப்பாடல் வழி ஒட்டக்கூத்தர் மலரி என்னும் ஊரில் தோன்றியவர் என்பது தெரிகிறது. மலரி சோழ நாட்டு ஊர்களில் ஒன்ருன திரு எறும்பியூர் என்பதாகும்.

இதே பாடலின் ஈற்றடியை 'மணவை வரும் கூத்தன் தன் வாக்கு' என்று பாடபேதம் கொண்டு இவர் மணவையைச் சேர்ந்தவர் என்றும கூறுகின்ருர் கள். கம்பன் என்றும் கும்பன் என்றும் காழி ஒட்டக் கூத்தன் என்றும்... என்னும் பாடல் அடிகொண்டு இவர் சீர்காழியைச் சேர்ந்தவர் என்று குறிப்பிடுவாரும் உண்டு. இவர் தந்தையார் பெயர் சிவசங்கரப் பூபதி என்றும் தாயார் பெயர் வண்டமர் பூங்குழலி என்றும் வழங்கப் படுகிறது. மணக்குடியில் 'ஒட்டக்கூத்தர் மனைக்கட்டு' என்ற பெயரில் இன்றும் ஒரு இடம் உள்ளது. இப் புலவர் பிரானின் பெயர் திருவம்பல கூத்த முதலியார் என்பதே. தில்லை நடராசப் பெருமானுக்குரிய கூத்தன் என்னும் பெயரை ஏற்றுக் கொண்டவர்.

சோழ பரம்பரையில் பீஷ்மரைப் போன்று நின்று புகழ் காத்த புண்ணியன் ஒட்டக்கூத்தர். இவர் வாழ்ந்த காலத்தில் எதிரிலாக் கவியாக விளங்கும்படி, ஏற்றமிகு புலமையால் தோற்றம் புரிந்தவர். கலைமகளிடத்து அளவிலா ஈடுபாடு கொண்டு அம்மைக்கோர் ஆலயம் கூத்தனூர் என்னுமிடத்தில் அமைத்து வாழ்ந்தவர் இப் புலவர் பெருந்தகை.

ஒட்டக்கூத்தர் சோழநாட்டு மன்னர் மூவர் காலத்தில் பாட்டு மன்னராக விளங்கியவர். விக்கிரம சோழன் காலத்தில் இளமையும், புலமையும் இணைந்த மிடுக்கோடு விக்கிரம சோழன் உலா பாடினார். அம் மன்னன் காலத்திற்குப் பின் அவன் மகன் குலோத்துங்க சோழன் காலத்தில் அவைக்களப் புலவராக வீற்றிருந் தார். அம்மன்னன்மீதும் குலோத்துங்கன் உலா பாடினார். அவனைச் சிறப்பித்துப் பாடும்போதுதான்,

'ஆடும் கடைமணி நாவசையாமல் அகிலமெல்லாம்
நீடுங் குடையில் தரித்த பிரான்...

என்று பாட குலோத்துங்கன் இடைமறித்து,

—நித்த நவம்

பாடுங் கவிப் பெருமான் ஒட்டக்கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழன் என்றே என்னைச் சொல்லுவரே.'

என்று பாடி முடித்தான். குலோத்துங்கனுக்குப் பிறகு பட்டமேற்ற இராசராசன் காலத்தும் சோழப் பேரரசின் அவைக்களப் புலவராக வீற்றிருந்தார். ஆக சோழ நாட்டில் மூன்று பேரரசுகள் ஒரே குலத்தில் ஆண்ட ஏறத்தாழ ஒரு நூற்றாண்டு காலம் வாழ்ந்த நிறைவாழ்வு பெற்றவர் ஒட்டக்கூத்தர் எனலாம். பதினோராம் நூற்

ருண்டில் வாழ்ந்த பைந்தமிழ்ப் புலவர்களின் திலகமாகத் திகழ்ந்தவர் ஒட்டக்கூத்தர்.

இவர் தன் காலத்தே ஏனைய புலவர்கள் வந்து தாம் பாடிய கவிதைகளை மதிப்பிட்டுக் கொள்ளும் கட்டளைக் கல்லாகத் திகழ்ந்தவர் என்பதனைக் குட்டுதற்கோ... பாடல்வழி அறிந்து கொள்கின்றோம். மதிப்புரை மட்டும் வழங்கும் பணியோடு நின்றுவிடாமல், படைப்பாளி யாகவும் ஒட்டக்கூத்தர் திகழ்ந்துள்ளார். இவர் பாடிய நூல்கள் சரசுவதியந்தாதி, ஈட்டியெழுபது, எழுப் பெழுபது, தக்கயாகப் பரணி, இராமாயண உத்தர காண்டம், மூவர் உலா, காங்கேயன் நாலாயிரக் கோவை, அரும்பைத் தொள்ளாயிரம், குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ் ஆகியனவாகும். இவையன்றியும் இன்னும் சில தனிப்பாடல்கள் பாடிப் புகழ் சேர்த்துள்ளார்.

ஒட்டக்கூத்தர் பற்றிய வரலாற்றுச் செய்திகள் அவரைக் குன்றிலிட்ட விளக்கெனக் காட்ட, கோணல் புத்தியும் குறுமதியும் கொண்ட சிலரால் அவரைக் குறித்த தவறான வழக்குச் செய்திகள் விடப்பட்டுள்ளன. பெரும் புலமையும் ஆற்றலும் கொண்ட அவர் புகழேந்தி யோடு பொறாமை கொண்டு செயல் புரிந்ததாக வருஞ் செய்திகள் யாவும் பிள்ளை விளையாட்டுபோலவே நமக்குப் படுகிறது. தன்னேரிலா தமிழ்க் கவிஞரை இராட்சசக் கவிஞர் என்று கூறிச் சிலர் குறிப்பிட்டுள்ளார்கள். தமிழ்த்தாயின் 'இரட்சகக் கவிஞராக' அவரை ஏற்றுக் கொள்ள வேண்டுமேயல்லாமல், முற்கூறிய தொடர் எக்காலத்தும் பொருத்தமானதில்லை.

'ஒட்டக்கூத்தன் பாட்டிற்கு இரட்டைத் தாழ்ப்பாள் என்றொரு பழமொழியை வைத்துப் புகழேந்திக்கும் கூத் தர்க்கும் உள்ள பேதத்தைக் கூறுவர். தமிழ்ப் புலவர்

களின் பாடல்களை மேலோட்டமாகப் பார்க்கக் கூடாது. அதில் முடிச்சுக்கள் இருக்கும். ஒரு சிலர் பாடல்களில் ஒரு முடிச்சு இருக்கும். ஆனால் ஒட்டக்கூத்தன் பாடல் களில் ஒன்றிற்கு மேற்பட்ட முடிச்சுக்கள் உண்டு என்பதே இப் பழமொழியின் கருத்து என்பர். இப் பழ மொழியே தண்டமிழ்க் கவிஞரின் தன்னேரிலா கவிதைக்குத் தமிழகம் தந்த பெருஞ்சிறப்பாகும்.

இதோ ஒட்டக்கூத்தர் மறைவுக்கு இரங்கல் தெரி விக்கும் இன்னொரு பாடல்:

**'நூற்றெண் பதின்காதம் நுங்கு நறுந்தமிழின்**
**ஏற்றமினி என்னுல் இயலுமோ—போற்றும்**
**புவிராசர் யாரும் புகழும் ஒட்டக் கூத்தக்**
**கவிராசர் காட்சியிலாக் கால்'**

அப்புலவரோடு சேர்ந்து நாமும் கூத்தரை நினைப்போம்!

# ஈட்டி எழுபது

## கடவுள் வாழ்த்து

நாட்டிலுயர் செங்குந்த நாயகர்மீ திற்சிறந்த
ஈட்டி யெழுப திணைப்பாடக்—கோட்டில்
பருமா வரையதனிற் பாரத நூல்தீட்டும்
கரிமா முகன்கழலே காபபு.

இதன் பொருள்: உலகத்திலுள்ளோரால் போற்றப்படுகின்ற மேலான புகழை உடைய செங்குந்தத் தலைவர்கள்மீது, பல சிறப்புக்களும் அமைந்த ஈட்டி யெழுபது என்னும் நூலினைப் பாட, தனது ஒரு கொம்பினால் பருத்துயர்ந்த மேருமலையில் பாரத நூலை எழுதி வைத்த அழகிய யானைமுக விநாயகக் கடவுளினது திருவடிகளே துணை நிற்கும்.

விளக்கம்: பாரதத்தைத் தனது ஒரு கொம்பினால், வியாசர் சொல்ல எழுதிய விநாயகக் கடவுள் இந்நூல் பாடவும் துணை நிற்பான் என்று தெய்வ வணக்கம் கூறினார். பாண்டவர்க்கும் கௌரவர்க்கும் நடந்த குலப் போராட்டம் வீர காவியமாக முகிழ்ந்தது போல, செங்குந்தப் பெருமக்களின் வீரச் செயல்களை இந்நூல் சுட்டுவதால் பாரத நூலோடு இந்நூலைக் காப்புச் செய்யுளிலேயே இணைத்துக் காட்டுகின்றார்.

நாட்டிலுள்ள இனத்தார்களில் வீரத்திலும் விவேகத்திலும் தியாகத்திலும் செங்குந்தர், உயர்ந்தோர்

என்பது காட்ட 'நாட்டிலுயர் செங்குந்த நாயகர்' என்றுரைத்தார்.

நூல் எழுதி அனுபவப்பட்ட விநாயகப் பெருமானே துணை நிற்பதால், இந்நூலும் எவ்வித இடையூறின்றி இனிது முடியும் என்பதும் நூலாசிரியர் கருத்தாகும்.

## பாயிரம்

பூவார் புவனையிற் சோமன் றரும்பழி போனபின்பு
நாவாணர் போற்றிய நாடகங் கேட்ப நலமுடனே
யாவாணர் செங்குந்த ராயிரத் தெண்டலை கொய்திரத்தப்
பாவாடை யிட்ட துலகமெல் லாம்புகழ் பாலித்ததே.

(இ-ள்) ஆவூரில் நலமிக்க செல்வத்துடனே வாழ்ந்த செங்குந்தத் தலைவர்கள், அழகமைந்த புவனை என்னும் பட்டினத்தில் சோமாசியாண்டார் என்பவரால் நேர்ந்த பழி நீங்கிய பின்னர், பெரும் புலவர்களால் போற்றப் படுகின்ற ஈட்டி எழுபது என்னும் நூலை, "கூத்தன்" என்னும் என்னுல் பாடக் கேட்பதற்காக தங்களில் ஆயிரத்தெட்டு பேர்களது தலைகளைக் கொய்து இரத்தப் பாவாடையிட்டமை உலகம் முழுதும் புகழ் பாலிக்கத் தக்க தொன்ருகும்.

இப்பாட்டில் காட்டப்படும் வரலாறு :

புவனை என்னும் பட்டினத்துக்கு அருகிலுள்ள திரு ஆவூரில் அரசச் செல்வத்தோடு வாழும் செங்குந்தத் தலைவர்கள், சபை கூட்டி கோவில் கட்டளை பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர். அப்போது சிவத்தல யாத்திரை புரிந்துவந்த கவிச் சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் சிதம்பர தரிசனம் முடித்து அங்கு வந்து சேர்ந்தார்.

வந்தவரை வரவேற்று இருக்கையளித்து உபசரித்துப் பணிவோடு, "ஐயா! நமது குலவண்மையைப் பற்றி யோர் நூல் பாடி எங்களை மகிழ்விக்க வேண்டும்" என்றனர்.

அது கேட்ட கூத்தர், 'நமது மரபின் புகழ் சிறக்க முன்னமே காந்த புராணமெனும் நூலுளது. அத்தோடு நம் மரபினர், ஒழுக்கங்கள் அத்தனையும் ஒருங்கு பெற்றவர்; திருக்கைலாய பரம்பரையினர்; நந்தி கணத்து அம்சத்தவர்; உப சுப்பிரமணிய மரபினர்; இவ்வித இயற்கை அழகுகள் பெற்றவர்க்குக் குல வண்மை பற்றிப் பாட்டுப் பாடுதல் செயற்கையழகு கூட்டுவது போலாகும். யானோ இவ் வம்சத்தைச் சேர்ந்தோன் ஆகலின் யான் பாடுதல் பொருந்தாது என்று கூறி, தன் நண்பரான சோமாசியாண்டார் என்பாரது இல்லம் சேர்ந்தார். செங்குந்தத் தலைவர்கள் கோபம் கொண்டு குல அபிமானம் இல்லாதவர் கூத்தர் எனக் கருதி கொலை செய்யத் துணிந்தனர். சோமாசியாண்டார் இல்லம் சென்று புலவர் பெருமானைத் தரும்படிக் கேட்டனர்.

அவரோ தன் நண்பரைக் காக்க வேண்டும் எனக் கருதி, தனது ஒரு பிள்ளையைப் பெட்டியில் வைத்து மூடி அவர்கள் எதிரில் கொணர்ந்து 'நீங்கள் கருதி வந்த புலவர் இப்பேழையில் உள்ளார். சூரியன் அத்தமித்த வுடன் உங்கள் கருத்தை முடித்துக் கொள்ளுங்கள்' எனச் சொல்லிக் கொடுத்தார்.

சோமாசியாண்டார் சொற்படி பெட்டியைக் கொண்டுபோய் திறந்து பார்க்க அதனுள் அவரது பிள்ளை இருக்கக் கண்டு வியந்தனர். பிள்ளையைக் கொல்ல அஞ்சிப் பெற்றவரிடமே சேர்த்தனர்.

இவையனைத்தும் அறிந்த கூத்தர் செங்குந்தத் தலைவர்களை நோக்கி ஒவ்வொரு இனத்தாரும் தத்தம் இனத்தையே மேலாகக் கூறி வாதம் செய்தல் இழுக்கு செய்தொழில் வேற்றுமை கொண்டே மேம்பாடு காண வேண்டும். என் வாக்கு, சத்தியத்தின் எதிரொலியாயின், என் நாக்கில் நாமகள் குடிகொண்டிருப்பது நிச்சயமாயின், நம் குலத் தலைப்பிள்ளைகள் ஆயிரத்தெட்டுபேர் சிரத்தினைப் பரிசாகத் தருவீரேல் நம் குல ஆயுதமாகிய ஈட்டியைச் சுட்டி 'ஈட்டி எழுபது' எனும் நூல் பாடி இவ்வுலகினர் வியக்கச் செய்வேன் என்றார்.

ஆவூர் செங்குந்தத் தலைவர்கள் அதிக மகிழ்ச்சி கொண்டு எங்கே? எவ்வாறு? தலைகளைச் சேர்ப்பிக்க வேண்டும் என்று கேட்க, புலவர் பெருமான் உறையூரில் குலோத்துங்கச் சோழனுடைய சபா மண்டப வாசலில் வீற்றிருந்தருளும் வீரலட்சுமி முன்பு சிங்காதனம்போல் அடுக்கி இரத்தப் பாவாடை விரித்து அலங்காரம் செய்வித்திடும்படி ஆணையிட்டார்.

குறித்த நாளில் ஆவூர் செங்குந்தத் தலைவர்கள் தங்குலப் பிள்ளைகள் ஆயிரத்தெட்டு சிரங்களை வண்டியிலேற்றி உறையூர்க்குக் கொண்டு வந்தனர். சோழன் ஆசார வாசலில், இரத்தப் பாவாடை பரப்பி சிம்மாதனம் போல் அடுக்கி அலங்காரம் செய்தனர்.

கூத்தர் சிரச் சிங்காதனத்தின் மேலேறி அமர்ந்து, மன்னர்களும் வேதாகமப் பண்டிதர்களும் மகிழ்ந்து விரும்பிக் கேட்ப, ஈட்டி எழுபது என்னும் இந்நூலை எழுபது பாடல்களால் நிறைவு செய்தார்.

ஒன்பான் சுவை ததும்பும் இந்நூற் பாடல்கள் கேட்ட சிரங்களே பற்பல உணர்ச்சிகளைக் காட்டிக்

கேட்டன. கூத்தர் இப்பிரபந்தம் பாடத் தொடங்கிய மாத்திரத்தில் சிங்காதன உருவமாய் அமைந்திருந்த சிரங்கள் யாவும் கூட்டம் கூட்டமாய் மேலெழும்பி, ஆகாய வழியே சென்று ஆங்காங்குள்ள தத்தம் உடல்களில் ஒட்டிக்கொண்டன. அங்குள்ள மன்னர்கள் மாமன்னர் குலோத்துங்கரை நோக்கி இவரே 'தெய்வீகக் கவி!' இவரால் நீவிர் இருமைப் பயனும் பெறுவீர் என்று வாழ்த்தி மகிழ்ந்தனர்.

சபையிலிருந்த பெரியோர்கள் கூத்தரைப் பார்த்து 'பெரு நாவலரே! அற்ற தலையும் உடலும் ஒட்டப் பாடிய காரணத்தால் இன்று முதல் 'ஒட்டக்கூத்தர்' என்று உலகத்தாரால் அழைக்கப்படுவீர். இந்நிகழ்ச்சிக்குக் காரணமான ஆவூர் செங்குந்தத் தலைவர்கள் உள்ளிட்ட இனத்தார்க்கு 'சிரச்சிங்காதனாதிபதிகள்' என்னும் சிறப்புப் பட்டம் பொருந்தட்டும்' என்று வாழ்த்தினர்.

விளக்கம் : பரணி நூல் பாட ஒரு வீரச் செயல் எவ்வாறு முன்னின்று தூண்டுகின்றதோ அதேபோல் இந்நூல் பாடவும் ஒரு வீரச்செயல் முன்னிற்கிறது. சிரச் சிங்காதனம் இட்டுச் செந்தமிழில் வீர காவியம் பாடிய கூத்தரின் சிறப்பும் அதற்கென தியாகம் புரிந்த செங்குந்த குல மக்களின் பெருமையும் பாராட்டத் தக்கது.

இப்பாடலில் காட்டப்படும் 'புவனை' என்னும் பட்டினம் சிதம்பரத்திற்கு வடமேற்கே பத்துகாத தூரத்தில் உள்ள புவனகிரியைக் குறிக்கும். அவ்வூரின் ஒரு பகுதியைப் புவனை என்றும் மற்றொரு பகுதியை ஆவூர் என்றும் வழங்கி வந்தனர்.

இனி புவனை என்பது கும்பகோணத்திற்கும் திருவிடைமருதூருக்கும் இடையேயுள்ள திரிபுவனம்

என்னும் திருத்தலத்தைக் குறிக்கும் என்றும், அவ் வூருக்கு அருகில் ஆவூர் என்னும் சிற்றூர் இன்றும் உள்ளது என்றும் அறியப்படுகிறது. ஒட்டக்கூத்த ரின் உயிர்காத்த அந்தணப் பெருமகன் சோமாசியாண் டாரை 'திரிபுவனத்து வள்ளல்' என்று நூல்களில் சுட்டப் படுகிறது.

புலவர் பாடும் பாடலுக்குத் தன் தலை மட்டும் தந்த குமண வள்ளலின் பெருமையைவிட ஆயிரத்தெட்டு தலை தந்து அருங்காவியம் கண்ட மரபு செங்குந்த ருடையது. அச்சிறப்பு தோன்றத்தான் 'ஆயிரத்தெண் தலை கொய்து இரத்தப் பாவாடை இட்டது' என்று கம்பீரமான கவிதை வரியைப் படைத்தருளினர். இச் செயல் செகம் உள்ளவும் புகழ்தரக் கூடியதாகும் என்பது தோன்ற 'உலகமெல்லாம் புகழ் பாலித்தது' என்றுரைத்தார்.

## மங்கல வாழ்த்து

**பூதலம் வாழ்க குந்தர் பொலிவுடன் விளங்க நான்கு**
**வேதமெந் நாளு மோங்க வேதியர் பசுக்கள் பல்க**
**மாதவர் வளவன் செங்கோல் வளமை குன்றுது நிற்க**
**ஓதமே யறையும் பொன்னி யுறந்தையுஞ் சிறக்க மாதோ.**

(இ-ள்) எல்லா வளமும் பெற்று உலகம் மென் மேலும் வாழ்க. செங்குந்தத் தலைவர்கள் பொலிவு பெற்று நீடூழி வாழ்க. நான்கு வேதங்களும் எக்காலமும் ஓங்குக. செந்தண்மை மிக்க அந்தணர் பசுக்கள் பல்குக. சோழ மன்னனின் செங்கோல்வளம் குறையாது பெருகி நிற்க. கடல் போலக் காவிரியும், அக்காவிரியால் உறையூரும் சிறப்புப் பெறுக.

விளக்கம் : சேரச் செம்மல் இளங்கோவடிகள் சிலம்பு பாடும்போது, ஞாயிறு, திங்கள், வான்மழை, புகார் முதலிய சிறப்பு கூறியதுபோல கூத்தரும் ஈண்டு உலகம் தழுவிய உயரிய சிந்தனையோடு பூதலம் வாழ்க என்று வாழ்த்தித் தொடங்குகின்றார். "செங்குந்தர் பெருமை கூறும் இந்த வேளை செகத்தையும் நினைவு கொள்கின்றேன். எதனால் என்றால் செகம் வாழ்ந்தால் தான் செங்குந்தரும் சிறப்பாக வாழ முடியும்" என்னும் பிணைப்பைப் பாடலில் இணைத்துக் காட்டுகின்றார்.

காவிரியையும், உறையூர் மாநகரையும் சிறக்கப் பாடும் சிந்தனை கொண்டு, இந்நூலுக்கு ஆற்றுப் பெருமையும், நகரச் சிறப்பும் செவ்வனே பொருந்தி இருக்கும் தன்மையையும் காணலாம்.

## நூல் கேட்டோர் சிறப்பு

**கோட்கவி கொண்டு மாக்கள் கொடுந்தமிழ் கூறநீத்துத்**
**தாட்கவிப் புதிய வாட்டந் தலைக்கடை துரந்து சாட**
**வாட்கவி கொண்ட மன்னன் வளவனு மகிழ நாமே**
**நாட்கவி பாடு நாட்போ லிருப்பது பெரிய நாடே.**

(இ-ள்) புல்லிய கவி வாணர் முன்னோரது மேற்கோளாகிய பழமொழிப் பொருளைக் கொண்டு சில பிரபந்தங்களைப் பாடிவந்து அரங்கேற்றும் கொடுந்தமிழை நீக்கி, அப்போலிக் கவிகளைத் தலைவாயில் அளவும் துரத்திச் சாடும்படி, வாள் போன்ற என்னைக் கவிச் சக்கரவர்த்தியாகக் கொண்டிருக்கும் குலோத்துங்கன் மிக மகிழ்ந்து கேட்க, கூத்தனாகிய நாமே நாடோறும் பாடும் இம்மகிழ்ச்சிகரமான நாளைப்போல சோழ நாடு சிறப்புற்றுள்ளது.

கொடுந்தமிழ் வாட்டம் தலைக்கடை துரந்து சர்ட மன்னன் மகிழ கவிபாடும் இந்நாள் போல இச்சோழ நாடு மகிழ்ந்துள்ளது என்பதாம்.

போலிக் கவிஞர்களை இரண்டிரண்டு பேராய் ஒன்று சேர்த்து தலைகளை வெட்டும் செயல் ஒட்டக்கூத்தரால் நடத்தப்பட்டதால் கொடுந்தமிழ்க் கவிஞர்கள் இவரைக் கண்டு தலைக்கடை வரை ஓடினர்.

கவிபாடும் நாளெல்லாம் களித்திருக்கும் நாள் என்பது அக்கால வழக்கம். கவிபாடிக் களித்திருக்கும் அந்நாள் போல பெரிய சோழநாடு களித்துள்ளது என்று கூறுமுகத்தான் கவிதைக்கு மக்கள் தந்திருந்த மதிப்பு எவ்வளவு உயர்ந்தது என்பது எண்ணி மகிழத்தக்க தாம். ஒட்டக்கூத்தன் பாட சோழன் குலோத்துங்கன் மகிழ்ந்து கேட்கும் செய்தியும் பாட்டில் வரலாற்றுச் செய்தியாக வந்துள்ளது.

## செங்குந்தத் தலைவர்கள் சிவத்தலங்களைப் பரிபாலனம் புரியும் பாங்கு

**விடங்கமே ழாதி வீதி விடங்கமா ரூர்வெண் காடும்**
**நடங்கொளுந் தில்லை மூதூர் பஞ்சநன் னதிசாய்க் காடும்**
**இடங்கொள்மா காளமேழு மிடைமரு தூர்செங் காடும்**
**தொடங்கிய தரும வாட்சிச் செங்குந்தர் தொகுதி வாழி.**

(இ-ள்) வீதி விடங்கப் பெருமான் என்றும் தியாக ராசர் எழுந்தருளியுள்ள திருவாரூர் முதலான ஏழு சிவத் தலங்களும், திருவெண்காடும், இறைவன் நடனமிடும் சிதம்பரமும், திருவையாறும், திருச் சாய்க்காடும் இட மகன்ற மாகாளமென்னும் சப்த சிவத் தலங்களும், திரு விடை மருதூரும் திருச்செங்காடும் ஆகிய இச் சிவத்

தலங்களுக்கு ஆதி முதல் தர்மகர்த்தாவாக இருந்து பரிபாலனம் புரிந்து வருகின்ற செங்குந்தர் கூட்டங்கள் வாழ்க.

விளக்கம்: முதலடியில் சுட்டப் பெற்ற ஏழு சிவத்தலங்கள் திருவாரூர், திருக்காரோணம், திருநள்ளாறு, திருக்காருயில், திருக்கோளரியூர், திருவான்மியூர், திருமறைக்காடு என்பனவாம்.

இப்பாடலில் குறித்துள்ளபடி தமிழகத்தின் முக்கிய சிவத் தலங்களைப் பரிபாலனம் புரியும் அறங் காவலர் குழுத் தலைவர்களாகச் செங்குன்றப் பெரு மக்களே பணி புரிந்து இருக்கின்றார்கள். இம் மக்கள் சிறந்த சிவநேசச் செல்வர்களாக விளங்கி சிவத்தைப் பேணும் செயலில் முன் நின்றுள்ளார்கள் என்பது அறியலாம். இன்றும் தெய்வீகப் பணியில் ஏனைய இனத்தாரைக் காட்டிலும் இவர்களே உரிமையும் ஆர்வ மும் மிகுதியும் கொண்டு தங்களை ஆட்படுத்திச் செயல் புரிவதைக் கண் கூடாகக் காணலாம்.

**பாத நூபுரத்தில் தேவி சாயைகண் டமலன் கொண்ட**
**காதலால் கருப்பமாகுங் கதிர்நவ மணிமாதர்க்கண**
**மேதகு வீரத்தோடு மென்மீசை யோடும் வந்த**
**மாதவ வீரவாகுத் தலைவரித் தலைவர் மாதோ.**

(இ-ள்) உமா தேவியாரின் பாதச் சிலம்பில் உதிர்ந்த நவமணிகளில் அப்பார்வதியின் திருவுருவத்தைக் கண் ணுற்று சிவபெருமான் கொண்டருளிய இச்சையால் கருவுற்ற ஒளியுடைய நவரத்தினப் பெயர் கொண்ட மகளிர்களிடத்தில் மேம்பாடமைந்த வீரத்தன்மையுட னும் மிருதுவாகிய மீசையுடனும் உதித்த பெருந்தவ முடைய வீரவாகு தேவர் முதலிய நவவீரர்களின் மரபினர் இச் செங்குந்தத் தலைவர்கள்.

இப்பாட்டு சுட்டும் சரித்திர வரலாறு !

பூர்வத்தில் விட்டுணி, பிரமன், உருத்திரன் முதலிய தேவர்கள் எல்லாரும் சூரபன்மன் சிங்கமுருகன் தாரகன் முதலிய அவுணர்களால் துன்பமுற்று, திருக்கைலையில் எழுந்தருளிய சிவபெருமானை வணங்கி "எம்பெருமானே! அடியேம் இது நாள்காறும் சூரன் முதலிய அசுரர்களால் மிக வருந்தினோம். எங்களைக் காக்க உமக்கொப்பாக ஒரு திருக்குமாரரைப் பெற்றுத் தர வேண்டும்" என்று வேண்டினர்.

அப்போது சிவபெருமான் நீங்கள் வருந்தாதீர்; ஒரு புதல்வனைத் தருவோம் என்று திருவாய் மலர்ந்து தமது பழைய ஆறு திருமுகங்களில் நெற்றிக்கண் தோறும் ஒவ்வோர் அக்னிப் பொறியைத் தோற்றுவித்தருளினார். அப்பொறிகள் தேவர்கள் யாவரும் நெருங்க முடியாத படி மிக்க வெம்மையோடு அண்ட பகிரண்டமெலாம் நடுங்க உலகமெங்கும் பரந்தன. உமாதேவியாரும் இவ் வெப்பத்தைத் தாங்க முடியாமல் தன் திருவடிகளிலுள்ள நவரத்தினச் சிலம்புகள் ஒன்றோடொன்று புலம்பித் தாக்க தமது திருக்கோயிலுள்ளே ஓடினார்.

இந்நிலை கண்டு தேவர்கள் பிதாவே! அசுரர்களைக் கொல்ல ஒரு குமாரரை வேண்டினோம். நீங்களோ அக்கினியைக் கிருபை புரிந்தீர். ஒரு கணத்தில் அந் நெருப்பை மாற்றுது விடுவீராயின் உலகத்தையே அது அழித்துவிடும். உமது பாதமே சரண் என்று விண்ணப்பம் செய்தார்கள்.

சிவபெருமான் வாயுதேவனையும் அக்கினித் தேவனையும் அழைத்து 'நீங்கள் இப்பொறிகளைத் தாங்கிச் சென்று கங்கையில் விடுங்கள். அக்கங்கை இவ்வனற் பொறிகளைச் சரவணப் பொய்கையில் சென்றுய்க்கும்'

என அருளினர். அவ்வாறே அவர்கள் அப்பொறிகளைக் கங்கையில் விட, அக்கங்கை அவைகளைச் சரவணப் பொய்கையில் கொண்டு சேர்த்தது.

அருவமும் உருவமும் அநாதியாயும் ஒன்ருயும் பலவாயும், பரப்பிரம்மமாயும் நின்ற சோதிப் பிழம்பே திருமேனியாக, கருணை வெள்ளம் பாய ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக் கரங்களும் கொண்டு உலகம் உய்ய முருகனுய் திருவவதாரம் புரிந்தது.

சரவணப் பொய்கையில் முருகக் கடவுள் புரியும் திருவிளையாடல்களைக் கண்டு விட்டுணு முதலிய தேவர்கள் கார்த்திகை மகளிர்களை அனுப்பி திருமுலைப்பால் தந்து துயில் செய்து துதிக்கச் செய்தனர்.

அக்கினிப் பொறிக்கு ஆற்ருதோடிய பார்வதி இவையனைத்தையும் அறிந்து 'எம்பிரானுக்குக் குமரன் என்னிடத்தே தோன்ரு வண்ணம் செய்த இத்தேவர்களின் பத்தினிகளுக்குப் புதல்வர்கள் இல்லாதொழிக' என்று சாபம் கொடுத்தார். பின் சிவனேடு சென்று சேர்ந்தார். உமா தேவியார் ஓடியபோது அவருடைய திருவடிச் சிலம்பினின்று சிதறிய ரத்தினங்கள் சிவபெருமான் திரு முன்பு நின்றன. அவைகளில் உமாதேவியார் திருவுருவம் தோன்றியது. சிவபெருமான் அவைகளை வருக என அழைக்க, ஒவ்வோர் ரத்தினங்களிலும் ஒவ்வோர் சக்தியாக நவசக்திகள் தோன்றின.

அந் நவசக்திகள் சிவபெருமான் மேல் விருப்பம் கொண்டமையால் கருப்பங் கொண்டன. பார்வதி தேவி கோபம் கொண்டு 'நீங்கள் பலகாலம் இக் கருப்பத்தோடு இருங்கள்' என்று சாபம் தந்தார். நவசக்திகள் அஞ்சி நடுங்கி வியர்த்துப்போக, அவ்வியர்வையினின்றும் தேவ தேவர் திருவருளினுல் ஓரிலக்க வீரர்கள் உதித்

தார்கள். அவர்கள் சிவனைச் சென்று தொழ 'நீவிர் யாவரும் எம் குமாரனான முருகனுக்குப் படைவீரராவீர்' என்று அருள் வழங்கினார்.

பார்வதி தேவியின் சாபம் பெற்ற தேவ மாதர்கள் கருப்ப பாரம் தாங்காது உமா தேவியையும், சிவபெருமானையும் துதித்தனர். ஐயன் அன்னையின் திருமுகம் நோக்கி 'உமையே! இவர்கள் பட்ட துன்பம் போதும். புதல்வர்களைப் பெற அருள் புரிக' என்றார். அம்மை அவ்வாறே செய்ய மாணிக்க வல்லியிடத்து வீரவாகுவும், மௌத்திக வல்லியிடத்து வீர கேசரியும், புட்பராக வல்லியிடத்து வீர மகேந்திரரும், கோமேதக வல்லியிடத்து வீர மகேச்சுரரும், வைடூரிய வல்லியிடத்து வீர புரந்திரரும், வைர வல்லியிடத்து வீர ராக்கதரும், மரகத வல்லியிடத்து வீர மார்த்தாண்டரும், பவளவல்லியிடத்து வீராந்தகரும், இந்திர நீல வல்லியிடத்து வீர தீரரும் அவதரித்தார்கள். நவ வீரர்களும் சிவபிரானைச் சென்று துதித்தனர். அப்பன் அம்மையிடம் நம் மைந்தர்களாகிய இவர்கள் அறிவும் ஆற்றலும் மானமும் ஒழுக்கமும் மிக்குடையவர்கள். இவர்கள் புதியவர்கள் அல்லர். நந்தி கணத் தலைவர்கள் என்று கூறினார். நவ வீரர்களிடம் "நீவிர், அறுமுகக் கடவுளை நீங்காது தொண்டு செய்க" என்று ஆணையிட்டார். பார்வதி தேவியின் அருளினால் அந்நவ வீரர்கள் தோன்றும் போதே மேலான வீரத்தோடும், முகத்தில் மெல்லிய மீசையோடும் தோன்றினர்.

பின்னர் சிவபெருமான் உமா தேவியாரை நோக்கி 'சரவணப் பொய்கையில் தேவர் துயர் நீக்கத் தோன்றியுள்ள கந்தவேளை அழைத்து வருவோம்' என்றனர். உமாதேவி அப்பொய்கையில் இறங்கி ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக்கரங்களோடும் சேர்ந்த ஒரு

திருவுருவமாகச் செய்தார். உச்சி மோந்தார். அன்பின் பெருக்கால் அம்மை தனங்களில் பால் சுரக்க, மணிக் கிண்ணத்தில் எடுத்து வழங்கினார். கார்த்திகைப் பெண்கள் வந்து வணங்கினர். உங்களால் இவன் வளர்க்கப்பெற்றமையால் இவனுக்குக் 'கார்த்திகேயன்' என்னும் பெயர் வழங்கும். உங்கள் நாளாகிய கிருத் திகை நாளில் இவனைப் பூசித்தோர்க்கு விரும்பியவற் றைத் தந்தருள்வான் என்று வரம் தந்தார். சரவணப் பொய்கையில் மீனுருக் கொண்டிருந்த பராசர முனிவ ருடைய ஆறு புத்திரர்களுக்கும் சாபம் நீங்க அருள் வழங்கிச் சிவன் சிறப்பு புரிந்தார்.

சிவபெருமான் அனைவர்க்கும் விடைதந்து அனுப்பி விட்டு உமையோடும் குமரனோடும் திருக்கைலை அடைந் தார். அப்போது ஓரிலகத்து ஒன்பது பேரும் கந்தக் கடவுளின் திருவடி தொழுது அவரை அகவாது சூழ்ந் திருந்தனர். இது புராணம்!

அவ்வீரவாகுவின் மரபில் தோன்றியோர் செங் குந்தப் பெருமக்களாதலின், அவ்வீரவாகு தேவர் தோன்றிய வரலாற்றுச் சிறப்பை இவ்விடத்தே நினைவு கூர்ந்தார். இவ்வரலாற்றினை உச்சிமேல் வைத்துப் புலவர் போற்றும் கச்சியப்பச் சிவாச்சாரியாரின் கந்த புராணச் செந்தமிழ் நூலில் மேலும் சிறக்கக் காணலாம்.

### குந்தப் படைச் சிறப்பு

**பிறந்தவொன் பதின்மர்குந்தப் பெருமையாம் பேசமாட்டோம்**
**பறந்தன கழுகும் பாறும் பயிரய காளியஞ்ச**
**மறந்தகு மவுணர ராட்ட மடங்கின மகிழ்ச்சியால்வாய்**
**திறந்தன வலகை யீட்டஞ் செய்யவாய்ச் சிறுவரோடே,**

(இ-ள்) இவ்விதம் உதித்த வீரவாகுதேவர் முதலிய நவ வீரர்களுடைய திருக்கரத்தில் இருந்த, (உமையவள் வழங்கிய) ஈட்டிப் படையின் பெருமையை எம்மால் சொல்ல முடியாது. இருந்தும் ஒருவாறு முயல்கின்றோம். அவ்வீரர்கள் செய்த போரைக் கண்டு கழுகின் கூட்டங்களும் பருந்தின் கூட்டங்களும் ஆகாயத்தில் வட்டமிட்டுப் பறந்தன. துர்க்கையும் காளியும் கண்டு அஞ்சும்படி அவுணர்களின் பெருங் கூத்தாட்டம் கெட்டது. அவ்வவுணர்களின் கொழுத்த பிணக் குப்பையைக் கண்டு பேய்க்கூட்டங்கள் தங்கள் சிவந்த வாயை உடைய சிறிய குழந்தையோடும் வாய் திறந்தன.

விளக்கம் : படைத் தொழிலுக்குரிய கருவிகள் இரு வகைப்படும். ஒன்று கையில் வைத்தே பொருவது; மற்றொன்று வீசி எறிந்து பொருவது. குந்தம் என்பது கையில் வைத்திருந்தே பொருவதாகும். அதற்கான கைப்பிடியோடு அமையப் பெற்றிருக்கும். கைவேல், ஈட்டி, சவளம் என்ற பெயரில் இக்கருவி வழங்கப்படுகிறது.

இவ்விரு வகைக் கருவிகளைத்தான் வட நூலார் அஸ்திரம் சஸ்திரம் என்று குறித்தனர். அஸ்திரம் வீசி எறிவது; சஸ்திரம் கையில் கொண்டு பொருவது. குந்தம் சஸ்திரக் கருவி. சிவந்த குந்தக் கருவியைக் கைகொண்டமையாலே இவ்வினத்தார்க்குச் செங்குந்தர் என்ற பெயர் ஏற்பட்டது என்பர்.

**ஓதிய வேள்வியி னுவப்ப நாரதன்**
**போதவே தகர்தனைப் பொங்கு தீத்தர**
**வேதனைப் படுப்பதை விரைந்து கட்டியே**
**சேதனக் குதவின திருச்செங் குந்தமே.**

(இ-ள்) நாரத முனிவர் தாம் விரும்பிய பயனைப் பெற்றுச் சந்தோஷமடைய வேண்டும் என்பதற்காக,

விதிப்படி செய்த யாகத்திலிருந்து எரியும் அக்கினி யானது ஆட்டுக் கடாவைத் தந்தது. அது சகல உலகங்களையும் துன்பப் படுத்துவதைக் கண்டு நாரத முனிவரும் தேவர்களும் வெள்ளியங்கிரியில் விளையாடும் முருகப் பெருமானிடம் முறையிட்டார்கள். அம்முருகப் பெருமான் கட்டளையினால் அழகிய செங்குந்தராகிய வீர வாகுதேவர் விரைவில் சென்று அவ்வாட்டுக் கடாவைக் கட்டி முருகப்பெருமானுக்கு வாகனமாக உதவினர்.

வரலாறு: நாரத முனிவர் சிவபிரானை எண்ணி யாகம் ஒன்று செய்தார். வேள்வித் தீயிலிருந்து தகர் ஒன்று தோன்றியது. தோன்றிய ஆடானது "யாகத்தில் எம்மினம் பலவற்றையும் கொல்கின்றமையால் இவ்வுலகத்தவரை யான் கொல்வேன்" என்று, ஊழிக் காற்றும் இடியும் ஒருருக் கொண்டு வந்தது போல ஓடித் திரிந்து உயிர்களை வருத்தியது. இந்நிலை கண்ட நாரதரும் மற்றைய முனிவர்களும் திருக்கைலாயம் அடைந்து குமரக் கடவுளை வணங்கி அவ்வாட்டின் கொடுமை கூறிச் சரண் அடைந்தனர். குமரக் கடவுள் அபயம் தந்து, தம் பரிவாரத்துள் வீரவாகு தேவரை நோக்கி 'நீர் சென்று உலகைக் கலக்கி ஆடும் ஆட்டை விரைவில் கொணர்க' என்று கட்டளை பிறப்பித்தார். வீரவாகு தேவர் உலக முழுதும் தேடிக்காணுமல் பிரமபதத்தைக் கிட்டி அங்கு கண்டு ஆட்டின் கோட்டைப் பிடித்திழுத்துக் கொண்டுவந்தார். அவ்வாட்டை முருகக் கடவுள் தமது வாகனமாக்கிக் கொண்டார். நாரதமுனியும் வேள்வியைச் செய்து முடித்தார்.

ஆட்டை அடக்கிய பெருமை வீரவாகு தேவரின் கையிலுள்ள குந்தப் படையே என அதன் பெருமை கூறினர்.

## பிரமனைச் சிறையிட்ட சிறப்பு

**பொதிய மால்வரைக் குறுமுனி தேறவும் பொருள் சொன்ன**
**மதியை யாறென வுடையவோர் மூவிரு வதனத்தான்**
**கதியை யாற்றியுங் குணத்தொடு பழகியுங் காணு**
**விதியை மேலவர் நடுங்கிடத் தளையிடு மிளிர்குந்தம்.**

(இ-ள்) பெரிய பொதிகை மலையின்கண் உள்ள அகத்திய முனிவர்க்கு மெய்ஞ் ஞானத்தைத் தெளிந்து கொள்ளும்படி உண்மைப் பொருள் உபதேசம் சொன்ன முழுமதி ஆறு போன்ற ஆறுமுகத்தை உடைய முருகக் கடவுள், குந்தத்தை உடைய வீரவாகு தேவர் முதலிய வீரர்களைக் கொண்டு சத்திய லோகத்திற்குத் தலைவனாக உள்ள பிரமன் சிருட்டித் தொழில் புரிந்தும் இராசத குணத்தோடு இருந்தும் பிரணவத்திற்குப் பொருள் தெரியாது விழித்தபோது அவன் நடுக்கம் கொள்ள விலங்கிட்டார்.

வரலாறு: திருக்கைலாய மலையில் பிரமன் விஷ்ணு முதலிய தேவர்கள் சிவபெருமானை வணங்கி விடை பெற்று வந்தனர். வாசலில் இலக்கத் தொன்பதின்மர் சூழ நின்றிருந்த சண்முகப் பெருமான் பிரமனை நோக்கி 'இங்கே வருக' என்றழைக்க அவன் அவரை வணங் காது நின்றனன். அது கண்ட குமரன் பிரம்மனிடம் 'உமது தொழில் யாது?' என்று கேட்டார். சிருட்டித் தொழில் எனக் கேட்ட முருகன் புன்முறுவல் புரிந்து 'உலக முழுதும் படைப்பது உண்மையாயின் பிரணவப் பொருள் யாதெனத் தெரியுமா?' என்றார். பிரமன் பொருள் அறியாது திகைத்தான். பிரமனை நோக்கிப் "பிரணவப் பொருளே தெரியாது எவ்வாறு படைப்புத் தொழிலைப் புரிகிறீர்?" எனக் கேட்டு, தலையில் குட்டி வீரவாகு தேவரைக் கொண்டு கந்தகிரியில் சிறை வைத்

தார். பின் தானே படைப்புக் கடவுள் ஆனார். வந்த தேவர்கள் நடுங்கி ஓடினர்.

## தாரகன் வதைச் சிறப்பு

வனமுறு வாசமா வைகல் விட்டியா
சனமுற விண்ணிடந் தனிவை குந்தமும்
இனனுறு பங்கய மூவர்க் கெய்தவே
சினமுறு தாரகற் செறிசெங் குந்தமே.

(இ-ள்) அகத்தியன் முதலாய முனிவர்கள் அவுணர் களால் துன்பம் அடைந்து காட்டில் குடியாக இருத்தலை விட்டு தங்கள் பூசா காரியங்களை நடத்தவும், சுவர்க்க லோகமும் ஒப்பற்ற வைகுந்தமும் சூரியனைக் கண்டு மலரும் தாமரை ஆசனமும் மீண்டும் இந்திரன் திருமால் பிரமன் ஆகிய இம்மூவர்க்கும் கிடைக்கவும், கோபம் மிக்க தாரகாசுரனை யுத்தகளத்திலே நாசம் செய்தவர் செங்குந்தத் தலைவர்களாவர்.

வரலாறு : சூரபத்மன் கொடுஞ்செயலால் இந்திரன் திருமால் பிரமன் மூவரும் தங்கள் பதவியை இழந்தார் கள். தம்பிமார்களாகிய தாரகன் சிங்கமுகாசுரன் இவர் களின் பலத்தோடு மூவுலகங்களையும் சூரன் கலக்கினான். செங்குந்தர் குலத்தில் தோன்றிய வீரவாகு தேவர், முருகன் திருநாமத்தையும் சேவடியையும் மனத்துட் கொண்டு யுத்த களத்தில் தாரகனைத் தன் கைக் குந்தத் தால் தாக்கிக் கொன்றார்.

அங்கிகழ்ச்சியைச் சுட்டு முகமாகவே 'சினமுறு தாரகற் செறி செங்குந்தமே' என்று குறிப்பிட்டார்.

## பானுகோபன் வதைச் சிறப்பு

பூட்டிய தேரோடும் பொலிந்த பானுவை
யீட்டிய தொட்டிலி னிறுக்கு மைந்தனை
மூட்டிய சமரிடை முடித்து மாசறத்
தீட்டிய வீரர்கைச் சிறந்த குந்தமே

(இ–ள்) சூரபதுமனின் பிள்ளை பானுகோபன். இவன் குழந்தைப் பருவத்தில் தன்மீது சூரிய ஒளி தாக்கிட கோபித்தான். ஏழு குதிரைகள் பூட்டிய தேரோடு சூரியனைத் தன் நவமணித் தொட்டிலோடு சேர்த்துக் கட்டினான். அத்தகைய பானுகோபனை யுத்த களத்தில் சங்காரம் செய்து, அவுணர்களின் குற்றம் நீங்க, புகழை நன்றாக எழுதி வைத்தது நவவீரர் கையில் பிடித்த சிறப்பு மிக்க குந்தமாகும்.

சூரபதுமனின் பிள்ளை பானுகோபன் சூரியனோடு மாறு கொண்டவன். சூரிய ஒளி தன்மேல் பட்டதும் அப்பரிதியைச் சுளித்துப் பார்த்தவன். உடனே பாய்ந்து சென்று செங்கதிர்ச் செல்வனை ஒரு கணத்தில் கட்டிப் போட்டவன். அத்தகைய பானு மைந்தனையே தோளும் யாக்கையும் துவண்டு பட உயிரை வெளவியது குந்தப் படையேயாம். சிறந்த குந்தம்தான் இச்சீரிய செயலைப் புரிந்தது என்று பாராட்டுகின்றார்.

## சிங்கமுகனைக் கொன்று கடம்ப மாலை அணிந்த சிறப்பு

பங்கமி லரிமுகப் பஃற லைக்கினை
மங்கவே னூறியோர் வாகை மாலையை
யெங்கள் வேற்படை தனக்கென் று சூட்டியொண்
செங்கடம் பணியுமால் செய்ய குந்தமே.

(இ-ள்) இரத்தத்தால் சிவந்த குந்தமானது பங்க மிலா வரம் பெற்ற சிங்கமுகாசுரனுடைய பல தலைக ளாகிய கிளைகள் கெடும்படி அழித்து, வெற்றி மாலையை முருகக் கடவுளின் வேலாயுதத்திற்கே தக்கதெனத் தந்து தான் செங்கடப்ப மாலையைச் சூட்டிக் கொள்ளும்.

இப்பாடலில் சூரபதுமனின் தம்பி சிங்கமுகா சூரனை அழித்த நிகழ்ச்சியைச் சுட்டுகின்றார். வெற்றிக் கனி யைத் தன் தலைவனாகிய வேலாயுதத்தின் கையில் தந்து விட்டுத் தான் மட்டும் அடக்கத்தின் வடிவமாக செங்கடப்ப மாலையைச் சூட்டிக் கொள்ளும் சிறப்பு குந்தப் படைக்கு உண்டு என்று கூறிப் பாராட்டு கின்றார்.

## சூரபதுமனைக் கொன்று புலிக் கொடி பெற்ற சிறப்பு

**வனப்புறு மிளவலும் வரச் செவ் வேற்குகன்**
**கனப்பக லாறினில் கலாப மேறியே**
**யினப்புகழ் சேவலங் கொடிதற் கேற்று வெஞ்**
**சினப்புலி கொடிதரச் செறிசெங் குந்தமே.**

(இ-ள்) அழகு பொருந்திய இளவலாகிய வீரவாகு தேவர் முதலிய நவவீரர்களும் தம்மைச் சூழ்ந்து வர, சிவந்த வேலாயுதத்தை உடைய முருகப்பெருமான் ஆறு நாட்களில் சூரபதுமனை சங்காரம் செய்ய, அவன் கடலில் தலைகீழாக பாமர வடிவங்கொள்ள அதைத் தன் வேலினால் இரு பிளவாக்க அவ்விரு பிளவும் மயிலும் கோழியுமாகி வர, மயிலை வாகனமாகவும், தன்னினத் தைப் புகழா நின்ற கோழியைக் கொடியாகவும் கொள்ள சூரபதுமன் தன் கையில் கொண்டிருந்த புலிக்

கொடியைச் செங்குந்தர் வசம் கொடுக்கப் பெற்றுக் கொண்டனர்.

விளக்கம் : சூரபதுமனைக் கொன்று வெற்றியை ஈட்டித் தந்த செங்குந்தர் பெருமக்களைச் சிறப்பிக்க வேண்டுமென்றே, அவன் கைக் கொடியைச் செங்குந்தர் களிடையே முருகப் பெருமான் தரச் சொன்ன சிறப்பு கொண்ட குடி என்பது இப்பாட்டால் விளங்கும்.

### தேவர்கள் சிறை நீக்கிய சிறப்பு

**குறையினைக் கடவுளர் கூறக் கேட்டவர்**
**துறையினை நிறுவியே சூர்த டிந்துநான்**
**மறையினை வழுவற வளர்த்துத் தேவர்தம்**
**சிறையினை மீட்டது திருச்செங் குந்தமே.**

(இ-ள்) தேவர்கள் சூரனால் துன்பப்படும் தம் நிலையை முருகப் பெருமானிடம் எடுத்துரைக்கக் கேட்டு, பகையை அழித்து ஒவ்வொருவருக்கும் அவ்வவர் தம் பழைய நிலையைத் தந்து, வீர மகேந்திர புரத்தினின் றும் சிறைமீட்டு, நால்வகை வேதத்தையும் குற்றமற வளர்வித்த புகழைக்கொண்டது அழகிய செங்குந்த மாகும்.

விளக்கம் : தேவர்தம் குறையினைக் கேட்டு அவர் தம் சிறையினை மீட்டது திருச் செங்குந்தம் என்றார். வீர மகேந்திர புரத்தில் சிறை வைக்கப்பட்டிருந்த தேவர்கள் மீண்டும் தத்தம் கடமை புரிய சிறைமீட்டு நான்மறையை வழுவற ஓதவைத்த சிறப்பு செங்குந்தப் படையையே சாரும்.

## தேவேந்திரனுக்குப் பொன்னுலகச் சீர் நிலைபெறச் செய்தது செங்குந்தமே என்பதை விளக்கியது

**தாருவும் சுரபியுந் தவள வேழமும்**
**தாருடைப் புரவியுஞ் சசியுங் கைம்மிசைப்**
**போருடை வச்சிர வாளும் பொன்னகர்ச்**
**சீருறும் படியவுண் செறிசெங் குந்தமே**

(இ-ள்) அரிச்சந்தனம், கற்பகம், சந்தானம், பாரிஜாதம், மந்தாரம் ஆகிய பஞ்ச தாருக்களும், காமதேனுவும் வெள்ளி ஐராவதமும் சதங்கைமாலை முதலிய பல மாலைகளையுடைய உச்சைச்சிரவம் என்னும் குதிரையும் இந்திராணியும் கையின்கண் தாங்கிய பகைவர் போர் உடைக்கும் வச்சிராயுதமும், பொன்னுலகத்தில் அரசிருத்தல் முதலிய பல சிறப்புக்களும் மீண்டும் தேவேந்திரன் பெற்று இருக்கும்படி சூரபதுமனையும் அவுணர்களையும் அழித்தது செங்குந்தமே.

விளக்கம் : அவுணர் தலைவனால் சிறை வைக்கப் பட்ட தேவேந்திரன் தனக்குரிய சிறப்புக்கள் அத்தனையும் இழந்தான். இழந்த பழம்புகழ் மீண்டும் கிடைக்கச் செய்தது செங்குந்தமே என்று படைப் பெருமை கூறப் பட்டது.

## நவவீரர்கள் தேவர்பகை யாவையும் ஒழித்தனர் என்பதை விளக்கியது

**முன்பகை யாவையு முடித்துக் கூரெயிற்**
**றன்பகை யாவையுந் தடிந்து சந்ததம்**
**பின்பகை யில்லதாப் பெற்றி செய்ததா**
**மொன்பதி னோர்கரத் தொளிருங் குந்தமே.**

(இ-ள்) பழைய பகையாகிய சூரபதுமனைக் கொன்று அவனுக்குக் கொடுத்த வரத்தை நிறைவேற்றி, கூரிய பற்களையுடைய சிங்கமுகாசுரன் முதலிய தேவர் பகையாகிய யாவரையும் நாசம் செய்து பின்னர் எக் காலத்தும் பகை இல்லாததாக வீரத் தன்மை செய்து வைத்த சிறப்பு வீரவாகு தேவர் முதலிய ஒன்பது வீரர் களது கையில் உள்ள செங்குந்தப் படையேயாம்.

விளக்கம் : சூரபதுமன் முன் சென்மத்தில் அன்ன மும் கருடனும் துன்பத்தையடைய, மயிலையும் சேவலை யும் தூண்டிக் கலகம் விளைத்தான். பிரமன் விட்டுணு முதலியோர் சென்று முருகனிடம் முறையிட்டனர். முருகப் பெருமான் தம் பரிசனர்கள் வழியே அவனை அழைத்து 'நீவிர் நெடுநீர் பெருநிலத்தில் பாவநிருதர் குலத்துதித்துத் தேவர்க்கு இடுக்கண் செய்வீர் எம் பூவிலை வேலால் தொலைந்து நற்கதிபெறுவீர்' என்றருளி னான். அவனே நிருதர் குலத்துத் தோன்றினும் நின் அன்பு அகலா நெஞ்சம் வேண்டும் என்றும் உம் வேல் பட்டிறக்கும் வேளை, மயிலாகி கொடியாகி உமக்கிருக்க வேண்டும் என்று இருவரம் கேட்டான். அவ்விரண்டு வரமும் முருகப் பெருமான் நல்கிப் பகையையும் தம் பக்கமிருக்கும் சிறப்பு தந்து பாலித்த தன்மையை முன் பகை யாவையும் முடித்து என்று கூறினர்.

## திருக்கைலை முதலிய இடங்களைக் காக்கும் சிறப்பு

**வெள்ளிமால் வரைசூழ் காப்பு மிளிர்மணிச் சிகரக் காப்பும்**
**பள்ளிமால் வரையின் காப்பும் பைம்பொனு பரணக் காப்பும்**
**வள்ளிதாக் கைக்கொ ளென்று மகிழ்நீற்றுக் காப்பு மிட்டுத்**
**தெள்ளிதா யுமையா டந்த செங்குந்தம் போலு முண்டோ?**

(இ-ள்) உயர்ந்த வெள்ளியங்கிரியைச் சூழ்ந்து காக்கின்ற காவலும், உச்சியில் ரத்தினங்கள் இழைத்த கொலுமண்டபக் காவலும், அந்தப்புரத்தை உடைய மகா மேருவின் காவலும், பசும்பொன்னாலும், மணிகளாலும் செய்த ஆபரணங்களாலும் வளப்பமாகக் கைக்கொள்ளுங்கள் என்று உமாதேவியார் நவவீரர்களை அழைத்து மகிழ்ச்சியோடு திருநீற்றுக் காப்புமிட்டுத் தெளிவாகக் கொடுக்கப்பெற்ற இச்செங்குந்தம் போல இவ்வுலகத்தில் வேறுண்டோ?

விளக்கம் : வெள்ளியங்கிரி முதலாய இடங்களைக் காக்கும் பெரும் பொறுப்பை உமாதேவியார் முறைப்படி திருநீற்றுக் காப்பு செய்து செங்குந்தர்க்கே வழங்கியுள்ளமை அறிக.

திருநீற்றுக் காப்பிட்டது நவவீரர்கட்கும், அவர்தம் கையிலுள்ள வேலுக்கும் என்பதும் அறிக.

## செங்குந்தர் சிவ மரபினர் உமையவளால் கைவேல் பெற்றவர்

**சலம்பிரி யாத சூட்டுச் சாவற்கே தனமெஞ் ஞான்றும்**
**வலம்பிரி யாத செவ்வேட் குறுதுணை யாக மன்னுட்**
**குலம்பெற வந்தா ரென்றங் கொடியுமை தந்த வீட்டி**
**நலம்பெறு மிந்தக் குந்தர் பரிசுபோ ருட்டி லுண்டோ?**

(இ-ள்) தன்னினத்தில் ஒன்றையொன்று காணில் பகையால் கோப நீங்காத உச்சிக் கொண்டையினையுடைய சேவற் கொடியானது எக்காலத்தும் வலப் பக்கத்தே விட்டுப் பிரியாத சுப்பிரமணியக் கடவுளுக்கு மிகுந்த துணையாகவும், நிலைபெற்ற கைலாய பரம்பரைக் குலம் விளக்கம் பெற வந்தனர் என்று மகிழ்ந்து, கொடி

போன்ற உமா தேவியார் கொடுத்த கைவேல் சிறப்பு கொண்ட இச் செங்குந்தர் பெருமை போல, இந்நாட்டில் வேறில்லை.

விளக்கம் : முருகப் பெருமான் தன் வலப்பக்கத்தே சேவற் கொடியைக் கொண்டுள்ளார். சேவற் கொடி எவ்வாறு அப்பெருமானை விட்டு நீங்குவதில்லையோ அது போன்றே இவ்வினத்தாரும் முருகப் பெருமானை விட்டு நீங்குவதில்லை என்றார். தன் குமாரனைக் காக்கும் இவ்வினத்தார்க்கு, தாய் மகிழ்ந்து கைவேல் கொடுத்துச் சிறப்பித்தாள் என்பதும் இப் பாடல்வழி அறிந்து கொள்ளலாம்.

## அறுபடை வீட்டின் குந்தச் சிறப்பு

**பருப்பத மேரகம் பரங்குன் றம்பழம்**
**பொருப்பத மாவினன்குடி செந்திற்பொது**
**விருப்பெனக் குன்றுதோ ருடலா மெனும்**
**திருப்பதி தமிலமர் செய்ய குந்தமே.**

(இ–ள்) முருகப் பெருமானுக்குரிய திருவேரகம் என்னும் மலையும், திருப்பரங்குன்றமும், பழமுதிர் சோலையும் அழகிய திருவாவினன் குடியும் திருச்செந்தூரும் குன்றுதோருடலுமாமென்று சொல்லப்படும் ஆறு தலங்களிலும் இச் செங்குந்தம் வீற்றிருக்கின்றது.

விளக்கம் : முருகப் பெருமானின் ஆறு படை வீடுகள் திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவேரகம், திருவாவினன்குடி, குன்றுதோருடல், பழமுதிர்சோலை, என்பனவாம். திருவேரகம் என்பது சுவாமிமலையைக் குறிக்கும். பழமுதிர்சோலை மதுரைக்கருகே உள்ள கள்ளழகர் கோயிலாகும். திருவாவினன்குடி பழனி மலைக்கடிவாரத்தே உள்ள திருக்கோவில்.

இவ்வாறு படை வீட்டில் அமர் செய்யும் குந்தம் என்பதால், முருகனுக்குரிமையான மூவிரு தலங்களிலும் குந்தப் படைக்குரிய உரிமையும் பெருமையும் கூறப்பட்டது. தந்தைக்குரிய வெள்ளிமலை மட்டுமல்ல, மைந்தனுக்குரிய படைவீடுகளிலும் குந்தத்திற்கு உரிமை என்பதை அறியலாம்.

## குந்த மகிமைச் சிறப்பு

**தேடுவார் வலமாய் வந்து தெரிசிப்பார் சென்னிமீது**
**சூடுவார் மலரே தூவித் தொழுதகை கூப்பி நிற்பார்**
**பாடுவார் காவென் றெம்மைப் பரிவிஞ னந்தமாக**
**ஆடுவார் குகன்கைச் செவ்வேற் கருள்துணைக் குந்தமென்றே**

(இ-ள்) உலகினுள்ளார் முருகக் கடவுள் கையின் கண்ணுள்ள சிவந்த வேலாயுதத்திற்குத் துணையாக இச் செங்குந்தம் எனக் கருதி எங்குள்ளது அப்படை என்று தேடுவார். தங்கள் கண்களால் கண்டு வலமாக வந்து வணங்குவார். மலர்களால் அர்ச்சனை புரிந்து தலைமீது அணிந்து கொள்வார். பாதத்தில் வீழ்ந்து பரவி இருகை கூப்பி எதிராக நிற்பார். எம்மைக் காக்க வேண்டுமென்று அதன் புகழைப் பாடுவார். பின்னும் ஆசையோடும் ஆனந்தமாக ஆடுவார்.

விளக்கம் : ஆற்றல்கள் மிகப் பொருந்திய அறுமுகக்கடவுளின்கை வேலுக்கே இக் குந்தப் படை துணை நிற்கிறது. ஆகவேதான இதற்கு, வேலாயுதத்திற்கு என்னென்ன பெருமைகளும் சிறப்புகளும் உண்டோ அவை அத்தனையும் இக்குந்தப் படைக்கும் கொடுக்கப் பெற்றுள்ளமை காணலாம்.

## காளி கைத்தாளம் பறித்த சிறப்பு

**ஆலங் காட்டினி லரனுட னன்று வாதாடும்**
**கோலங் காட்டிய காளிதன் கொற்றம் போய்வெள்கப்**
**பாலங் காட்டிய பன்மணித் தாளமே பறித்துச்**
**சீலங் காட்டிய குந்தர்நற் பெருமையார் தெரிப்பார்.**

(இ-ள்) திருவாலங்காடு என்னும் சிவத்தலத்தில் பரமசிவத்தோடு அக்காலத்தே வாதாடுகின்ற கோலத்தைக் காட்டிய காளியம்மை, தனது வெற்றியிழந்து நாண, அக்காளியின் கையிலுள்ள ஒளிவீசும் இரத்தினங்கள் இழைத்த தாளத்தைப் பறித்து தமது மகிமையை உலகம் அறியச் செய்த செங்குந்தர் பெருமையை யார் சொல்லத் தக்கவர்?

விளக்கம் : திருவாலங்காட்டில் காளிக்கும் சிவபிரானுக்கும் இடையே நடைபெற்ற நடனப் போட்டியில் காளியால் சபையில் தோற்றம் தர முடியாத நிலையில் சிவன் நின்று வென்றார். தோல்வி கண்ட காளி வெட்கி நிற்கும்போது, அம்மையின் கைத்தாளம் பறித்தவர் செங்குந்தர் என்னும் செய்தி இப்பாட்டில் காட்டப்பட்டுள்ளது. இறைவன் நீதியை நிலைநாட்ட எங்கெங்கே செயல் மேற்கொள்கின்றாரோ, அங்கெல்லாம் துணை நிற்கும் பணி செங்குந்தர் பெருமக்களுடையதாக இருக்கக் காண்கின்றோம்.

## செங்குந்தம் தம்மை எதிர்க்கும் பகைவரை சுவர்க்கம் புகுத்தும்

**செங்களம் பொருதிய திருந்த லாருர**
**வங்கமே மண்மிசை யாக்கி யாவியைச்**
**செங்கதிர் வழியிடைச் செலுத்தித் தேவர்க**
**டங்களை வான்புகத் தருஞ்செங் குந்தமே.**

(இ-ள்) போர்க்காலத்தில் வந்து தம்மோடு எதிர்த்து யுத்தம் செய்த, பகைவர்களாகிய அரக்கர்களது வலிய உடலை மண்மீது விழச் செய்து, உயிரைச் சூரியன் மார்பின் வழியாகச் சுவர்க்க லோகப் பதவியை யடைவித்துத் தேவர்களையெல்லாம் வானுலகத்தில் என்றும் நிலைபெற்றிருக்கச் செய்யும் செங்குந்தம் என்றவாறு.

விளக்கம் : துஷ்டர்களை அழிக்கக்கூடிய செயலில் பகைமையை மட்டும் அழித்து, பகைவர்க்கு நன்மை வழங்கும் பெருஞ் சிறப்பு இப்பாடலில் சுட்டிக் காட்டப் பட்டுள்ளது. 'செங்கதிர் வழியிடைச் செலுத்தித் தேவர்க்கு வான் புகத் தருவது' அருளாட்சி என்பது உணர்க.

## தவத்துக்கு இடையூறு செய்வார் யாரேனும் அவரை செங்குந்தர் வருத்துவர் என்பது

**பரகதி வேள்வி பண்ணு மிருடிதன் பான்மை பாரா**
**வரகதி தந்தை யேவு மமரரை மடிய நூறி**
**யிரதமோ டிவுளி வேழ மியாகதா னத்துக் கீந்து**
**சிரமணி மகுடம் பெற்ற செங்குந்தர் போலுமுண்டோ?**

(இ—ள்) மோட்ச கதியை முருகக் கடவுளால் பெறும் பொருட்டு ஒரு முனிவர் யாகம் செய்தார். அம்முனிவரின் வைராக்கியத்தைப் பார்த்த பிரமன், தன் மேலான பதவியைக் கொடுக்க, அமரர் வழி சொல்லி அனுப்பினான். முனிவர் தான் விரும்பியது அது இல்லை என்று மறுத்தார். முனிவரை எதிர்த்து அமரர் மோதினர். அத்தேவர்களைப் போர்க்களத்தில் மடியக் கொன்று அவர்தம் இரதம் குதிரை யானைகளை யாகத்துக்குக் கொடுத்து அவர் சிரசில் தரித்திருந்த இரத்தின கிரீடங்

களைக் கைக்கொண்ட செங்குந்தர்களைப் போலும் இவ்வுலகிலுண்டோ?

வரலாறு : மூதண்ட முனிவர் மோட்சமடைய வேள்வி செய்தார். வேள்வியின் வைராக்கியம் கண்ட பிரமன் முதலிய தேவர் பொருமை கொண்டு யாகத்தைத் தடுக்க சூழ்ச்சி செய்தனர். ஒன்றும் பலிக்காமல் போகவே தம் பரிவாரத்தோடு சென்று மூதண்ட முனிவர் மேல் போர் தொடுத்தான். அதுகண்ட முருகக் கடவுள் நவ வீரரை ஏவி யுத்த களத்தில் மூதண்ட முனிவர்க்கு வெற்றியை உண்டாக்கினுர். வீரவாகு தேவர் யுத்தத்தில் தோல்வியடைந்த தேவர்களின் திரவியமனைத்தும் மூதண்ட முனிவரின் யாக சாலைக்குத் தானமாகக் கொடுத்து அவர்கள் அணிந்திருந்த இரத்தின கிரீடங்களைத் தமக்குச் சொந்தமாக்கிக் கொண்டார். பின்பு மூதண்ட முனிவர் யாகத்தை முடித்து விரும்பிய பயனைப் பெற்றுர்.

## சம்பாதிக்கமுதளிக்கும் சிறப்பு

அம்பாழி மூழ்கியொரு கற்ப மெலாங்
கிடைக்கினுமென் னழலி னின்று
வெம்பாமே வெளிக்காலுண் டுட்காலை
வெளியில்விடா திருந்தா லென்னே
வம்பாரு மிதழியணி வேணியனுர்
வேதமலை வலம்வந் தீண்டுஞ்
சம்பாதிக் கமுதளிக்குஞ் சயக்குந்தம்
போல்வினவத் தாரா வன்றே.

(இ-ள்) ஒரு கற்ப காலமெல்லாம் சமுத்திரத்தில் மூழ்கித் தவஞ் செய்திருக்கக் கிடைக்கினும் யாது பிரயோசனத்தைத் தரும். பஞ்சாக்கினி மத்தியில் நின்று

சரீரம் புழுங்காமல் வெளியில் உலாவுகின்ற காற்றை ஆகாரமாகக்கொண்டு உள்ளிருந்து இடை பிங்கலையின் வழியாகப் பன்னிரண்டங்குலம் செல்லாநின்ற காற்றைக் கும்பித்துச் சுழிமுனையில் செலுத்தி யோகஞ்செய்து ஒரு கற்ப காலமிருந்தாலும் யாது பிரயோசனத்தைத் தரும். வாசனை பொருந்திய கொன்றை மாலையைத் தரித்த சடா மகுடத்தை உடைய வேதகிரியார் வாழுகின்ற திருக்கழுக்குன்றத்தை வலமாக வந்து நெருங்கிய சம்பு, ஆதி என்னும் கழுகுகளுக்குத் தினம் அன்னத்தைக் கொடுத்து மோட்ச கதியை அடைவிக்கும் வெற்றி பொருந்திய நவ வீரர்களது செங்குந்தம் போலக் கேட்டவுடன் கொடுக்க மாட்டாதன மற்றைத் தவங்கள்.

விளக்கம்: கடலில் மூழ்கி தவம் செய்தாலும் யோகம் செய்திருந்தாலும் எவ்விதப் பயனுமில. சம்பாதிக்கு அமுது அளிக்கும் சயக் குந்தம் ஒன்றே கேட்டதைக் கொடுக்கும்.

## செங்குந்தத் தலைவர்களின் சைவ சமய பரிபாலனச் சிறப்பு

**உருக்கொடு பணியாதாரை யுளத்திலஞ் செழுத்தை யுன்னிப்**
**பெருக்கொடு தவளநீற்றைப் பேணியே பணியா தாரைத்**
**தருக்கொடு நின்று கண்ணீர்த் ததும்ப முன்னு டாதாரைத்**
**திருக்கோயில் வலம் வாராரைச் சினத்தொடு பொருஞ்செங்**
**குந்தம்**

(இ-ள்) சிவபெருமானை உள்ளத்தே உருக்கத்தோடு வணங்காதவரை, ஐந்தெழுத்தினைத் தமது உள்ளத்தில் தியானித்து வெள்ளிய திருநீற்றை மிகுதியாக விருப்பத்தோடு திருமேனியில் தரித்துக் கொள்ளாதாரை, தவச்

செருக்கோடு எதிராக நின்று ஆனந்தக்கண்ணீர் ததும்ப நடனம் செய்யாதவரை, சிவாலயங்களை வலம் செய்யா தாரை, கோபத்தோடு சங்காரம் செய்து விடுகின்ற குந்தப் படையைக் கொண்டவர்கள் இச் செங்குந்தப் பெருமக்கள்.

விளக்கம் : 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கியே' இறைவனைக் கண்டு பணிய வேண்டும் எனக் காட்டவே உருக்கொடு பணியாதார் என்றுரைத்தார். 'நான் மறக் கினும் சொல்லும் நா நமசிவாயவே' என்பதற்கொப்பவே உளத்தில் ஐந்தெழுத்தை உன்னுதல். 'மந்திரமாவது நீறு என்பதால்' நீற்றைப் பேணியே பணியாதார் என்றார் உச்சிமேல் கை குவித்து ஓங்கிய அன்பினால் இறைவன் திருமுன்பு ஆடுதல் நிலையையே தருக்கொடு கண்ணீர் ததும்ப முன்னுடாதாரை என்றார். தருக்கு என்பது இங்கே பக்தியால் விளையுமோர் கர்வம். இவ்வாறெல் லாம் இருந்து திருக்கோயில் வலம் வருதலைத் தம் கடமையாகக் கொண்டவர் செங்குந்தர் என்பதாம்.

## செங்குந்தம் அடியார்களுக்குச் சிவலோகத்தை ஆள வைக்கும் சிறப்பு

கூவிளை யிதழி தும்பை கொண்டருச் சித்த பேர்க்கும்
மூவர்தம் பாட லோதி முன்னின்று பணிந்த பேர்க்கும்
ஆவலோ டைந்தெ ழுத்தை யகத்துள்ளே நினைத்த பேர்க்கும்
தேவர்நா டாள வைக்குந் திருக்கை வேற்றுணைச்செங்குந்தம்

(இ-ள்) சிவபெருமானை வில்வத் தளிர்களும் கொன்றை மலர்களும் கொண்டு அருச்சனை செய்த அடியார்களையும் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார் ஆகிய

மூவரால் சொல்லிய தேவாரத் திருமுறைப் பாடலை தோத்திரம் செய்து எதிராக நின்று வணங்கின அடியார் களையும், ஆசையோடு ஐந்தெழுத்தை உள்ளத்தில் தியா னித்த அடியார்களையும், முருகக் கடவுளின் அழகிய கையில் நிலைபெற்ற வேலாயுதத்தைத் துணையாகக் கொண்ட செங்குந்தம் தேவர் நாட்டை ஆள வைக்கும்.

விளக்கம் : இறை வழிபாட்டு முறைகளில் மூன்றினை ஈண்டு சுட்டுகின்றார். மலர்கள் கொண்டு இறைவனை அர்ச்சிப்பது. மூவர் பாடிய தேவாரத்தை முன்னின்று ஓதுவது. ஆசையோடு ஐந்தெழுத்தை அகத்தில் நினைப்பது.

எவரொருவர் இம்மூன்றையும் முறையாகச் செய் கின்றாரோ அவருக்கு வீடுபேறு நிச்சயம் கிடைக்கச் செய்வது குந்தத்தின் பணியாகும்.

தான் துணையாகக் கொண்டிருக்கும் முருகப்பெரு மானின் திருக்கை வேலின் துணையைப் பெற்றுவது இச் செயலைக் குந்தப்படை செய்தீரும் என்பதற்காகவே 'திருக்கை வேற்றுணைச் செங்குந்தம்' என்றுரைத்தார்.

## குந்தப் படைக்கு ஒப்பின்மை கூறியது

**ஆலமார் மிடற்று ராடு மாடலே யாட லம்மை**
**ஏலவார் குழலா ளங்கைத் தாளமே தாளமேந்தும்**
**சூலமா குவதன் ஞன்கைச் சூலமே சூல மற்றிக்**
**கோலம் வாழ் வீரர் கையில் குந்தமே குந்தமாகும்.**

(இ-ள்) விடம் பொருந்திய கண்டத்தினையுடைய சதாசிவ மூர்த்தி ஊழிக் காலத்தே செய்யும் நடனமே நடனம். அதே காலத்தில் மயிர்ச் சாந்து பூசிய நீண்ட

கூந்தலையுடைய தாயாகிய ஞானசக்தி அந்நடனத்துக்கேற்ப தன் கையால் கொட்டுகின்ற தாளமே தாளம். அச் சிவபெருமான் தன் கையில் கொண்டுள்ள சூலமே சூலமாகும். அதுபோலவே அழகுமிக்க நவ வீரர்கள் கையில் கொண்டுள்ள குந்தமே குந்தமாகும்.

விளக்கம் : ஒன்றிற்கு ஒப்பு கூறுகின்றபோது அதன் எல்லை வரை சென்று ஒப்பு காட்ட நினைத்தல் இயல்பு. எல்லைவரை சென்று எண்ணிய பின்பும் இல்லை என்ற நிலை வருகிறது என்றால், பொருளையே ஒப்பாகக் கூறி விடுதலும் உண்டு. 'அவனுக்கு நிகர் அவனே தான்' என்பது போல.

ஆடலுக்கு ஒப்பு காட்ட ஊழிக் காலத்தே இறைவன் ஆடும் ஆடலே, தாளத்திற்கு ஒப்பு சொல்ல அதே வேளையில் அம்மை போடும் தாளமே, சூலத்திற்கு உவமை சொல்ல அப் பெருமான் கையிலுள்ள திரிசூலமே என்று கூறிவந்தவர் படைக் கருவிகளில் குந்தப் படைக்கு நிகரானது நவவீரர் கையிலுள்ள குந்தப் படையே என்று சொல்லும் நயம் எண்ணி இன்புறத்தக்கது.

## குந்தப் படை செந்தமிழ் நூல் கொண்ட சிறப்பு

**ஆதிநா ளுமையவ ளளித்த குந்தமே**
**சாதிநா லுவப்புடன றலைக் கொள் குந்தமே**
**காதிமே லவரையுங் கல்லுங் குந்தமே**
**கோதினம் பாடவே கொள்ளுங் குந்தமே.**

(இ-ள்) நம்மால் கூறப்படும் குற்றமற்ற பாடல்களை ஏற்றுக் கொள்ளும் குந்தம், முன்னாளில் உமாதேவியாலே வீரவாகு தேவர் முதலிய நவ வீரர்களுக்கு

வழங்கப்பட்ட குந்தமாகும். அந்நாளில் நின்ற நான்கு பிரிவு மக்களும் தங்கள் தலைமீது வைத்துக் கொள்ளும் குந்தமாகும். தன்னை வணங்காதவரைக் கோபித்து உலகில் நிலைபெறாது அழிக்கும் குந்தமாகும்.

விளக்கம்: குந்தப்படை பிறந்த இடமும், சென்று சேர்ந்த இடமும், செயலும், பெருமையும் இப் பாடலில் காண்க. உமா தேவி நவ வீரர்க்கு வழங்கியதால், எல்லா பகுதிகளிலும் உள்ள மக்கள் தலைமேல்வைத்துப் பாராட்டுவதால், வணங்காதாரை அழிப்பதால், செந்தமிழ்ப் பாடலை ஏற்றுக் கொள்வதால் இதன் பெருமை அறியலாம்.

கோதில் நம் பாடல் கொள்ளும் குந்தமே என்பதால் கூத்தர் தம் பெருமையை இங்கே நினைவு கூர்ந்தார். கவிச் சக்ரவர்த்தி எனும் பெருமையோடும், ஞானச் செருக்கோடும் சோழன் அவையில் தனக்கு நிகர் எவருமில்லை என்று வாழ்ந்த ஒட்டக்கூத்தர் தம் பாடலைக் குறிக்கின்றபோது கோதில் நம்பாடல் என்று கூறினர். மற்றவர் பாடலுக்கு மதிப்புரை வழங்கும் திறன் கொண்டு பிறர் மதிக்க வாழ்ந்த ஒட்டக்கூத்தன் பாடல் உச்சிமேல் புலவர் கொண்டு பாரட்டும் பாடலாகும். அப்பாடலை ஏற்றுக் கொண்டதால் குந்தத்தின் மதிப்பு மேலும் உயர்கிறது என்பதை இங்கே காட்டுகின்றார்.

## கொடைச் சிறப்பு

**கருதலர் பொடிபடக் கருதுங் குந்தமே**
**விருதுடைச் சூர்முடி வெட்டுங் குந்தமே**
**பொருதனிப் புலிக்கொடி புனையுங் குந்தமே**
**தருதலத் தருவெனத் தருஞ்செங் குந்தமே.**

(இ-ள்) வீரத்திற்கு அடையாளமாக புலிக்கொடியை அலங்காரமாகத் தரித்துக் கொள்ளும் செங்குந்தமானது பகைவர் முடியினைப் பொடிபடச் செய்து காட்டும். விருதுகள் பல பெற்ற சூரபதுமன் முதலிய அவுணர்களின் தலையை வெட்டிய செங்குந்தம் அடுத்தவர்க்குக் கொடுத்தலில் கற்பகமே மண்ணுலகில் வந்ததுபோல வழங்கும்.

விளக்கம் : வீரம் மட்டும் இருந்தால் போதாது. வீரத்தோடு ஈர உணர்வும் இதயத்தில் வேண்டும். குந்தப் படைக்கு இவ்விரண்டு உணர்வுகளும் உண்டு என்பதனை இப்பாடலில் சுட்டுகின்றார். பகைவரைப் பொடியாக்கும் சிறப்பு, விருதுடைச் சூரனை வெட்டிய நிகழ்ச்சியில் காட்டினார். வீரத்தை விளக்கிக் காட்டவே குந்தமானது புலிக்கொடியைத் தன் அடையாளமாக ஏற்றுக் கொண்டுள்ளது. புலி சோழனுக்குரியது. சோழ நாட்டு அவைக்களப் புலவராக இருந்த கூத்தருக்கு, புலிச்சின்னம் வீரத்திற்கு எடுத்துக் காட்டாக உள்ளது என்று கூறுவதில் உள்ள நாட்டுப் பற்று காண்க. வீரத்தோடு கொடையாகிய ஈர உணர்வும் உள்ளது என்பதனைக் காட்டவே 'தருதலத் தருவெனத் தரும் செங்குந்தம்' என்றார். கற்பக தருவே, இம்மண்ணுக்கு வந்ததுபோல இச் செங்குந்தம் தருமாம். குந்தம் தரும் என்பது அப்படையை உடைய இனத்தார்க்கு ஆகுபெயராக வந்தது என அறிக.

## பெறுதற்கரிய துணைகொண்ட சிறப்பு

**கைலைமால் வரையையும் காக்குங் குந்தமே**
**அயிலைநற் றுணையென வாக்குங் குந்தமே**
**வெயிலைமன் மணிகளின் மிளிருங் குந்தமே**
**மயிலைவா கனமென வாக்குங் குந்தமே.**

(இ-ள்) செங்குந்தமானது உயர்ந்த திருக்கைலை மலை முதலாய சிவபெருமானின் இடங்களையெல்லாம் தாக்கும். முருகப் பெருமானின் வேலாயுதத்தைத் தனக்குத் துணையாக ஆக்கும். ஒளி பொருந்திய நவ ரத்தினங்களைப் போல ஒளிரும். சூரபதுமனாகிய மயிலை முருகக் கடவுளுக்கு வாகனமாக மிளிர வைக்கும்.

விளக்கம்: குந்தப் படையின் வலிமையும் துணையாக உள்ள வேலால் பெற்ற சிறப்பும், ஒளி மிக்கதாக உள்ள தன்மையும், முருகனுக்கு வாகனம் தந்த வலிமையும் இப்பாடலில் காட்டுகின்றார்.

## செங்குந்தர்க்கு முதலியார் என்னும் பட்டம் வந்தமைக்கான காரணம்

**இந்திர னயன்மா றேவர் யாவர்க்கு முதன் மையாக**
**வந்தபான் மையினற் சூல மழுப்படை யத்தனுர்க்கு**
**முந்திய நாமந் தானு முதலிய ராகை யாற்செங்**
**குந்தர்சந் ததிக்கு மப்பேர் முதலிய ரென்று கூறும்.**

(இ-ள்) இந்திரன் பிரமன் விஷ்ணு முதலிய தேவர்கள் யாவருக்கும் முதன்மையாக ஆதியில் எழுந்தருளி வந்தவர் சூலமும் மழுவும் கொண்ட பரமசிவன். அவருடைய ஆதி நாமம் முதலியர் என்பது. அவர் வழியில் வந்தமையால் முதலியர் என்ற அப்பெயராலே உலகம் அழைக்கிறது.

விளக்கம்: படைத்தல் காத்தல் அழித்தல் ஆகிய முத்தொழில் புரியும் பிரமன் விஷ்ணு உருத்திரன் என்கின்ற மும்மூர்த்திகளுள் சிவனே முதலில் தோன்றியதால் முதலியர் எனும் பெயர் சிவனுக்குண்டு. அம்முதல்வனுர் வழியில் தோன்றிய இனத்தாராகையால்

இவர்க்கும் முதலியர் என்னும் பெயர் பொருந்துவதா யிற்று. முதலியர் என்பதுதான் தற்போது முதலியார் என்று வழங்கப்படுகிறது.

## முசுகுந்தன் நவவீரரைப் பெற்ற சிறப்பு

**முந்தை நோன்பினுன் முருக வேண முசு**
**குந்த னுக்கொன்பான் குமர ரைத்தர**
**வந்த வீரரிவ் வகிலம் வென்றிசை**
**தந்த குந்தரித் தகுசெங் குந்தமே.**

(இ-ள்) முசுகுந்தச் சோழன் சஷ்டி விரதத்தினை முறையாகச் செய்து நிற்க, முருகக் கடவுள் தமது இளவல்களாகிய நவ வீரர்களைப் படைத் துணைவர் களாகத் தந்தார். அவ்வீரர்கள் உலகிலுள்ள அரசர்களை எல்லாம் வெற்றிகொண்டு அம் முசுகுந்தச் சோழனுக்குச் 'சக்கரவர்த்தி' என்னும் பெரும் புகழை நிலைபெறச் செய் தார்கள். அத்தகைய பெரும் புகழ் தந்தோர் வழி வந்த வர்களே இச் செங்குந்தர்.

வரலாறு: ஒரு காலத்தில் விதூரமன் என்னும் கந்தருவன் சுகுமாரி என்னும் இருடி பத்தினியை விழைந் தான். அவள் கோபம் கொண்டு முசு ஆகுமாறு சாபம் தந்தாள். குரங்கு முகமடைந்த அவன் கைலை மலையில் உள்ள சோலையை அடைந்தான். அங்குள்ள குரங்குக் கூட்டம் வந்தவனை அரசனாக ஏற்றுக்கொண்டது.

ஒரு நாள் தன்னையறியாமல் வில்வ மாத்தின் மேலேறி வில்வத் தளிர்களை உருவி பூமியில் போட்டுக் கொண்டிருந்தான். அத் தளிர்கள் யாவும் அம்மரத்தடி யில் எழுந்தருளியிருந்த சோமாஸ்கந்தர் திருமுடியில்

அர்ச்சனைப் பத்திரமாகக் குவிந்தது. அதனைக் கண்ட உமாபதி விதூரமனைப் பார்த்து நீ அபுத்தி பூர்வமாகச் செய்திட்ட அர்ச்சனைப் பேற்றால் சூரிய குலத்தில் பிறந்து எண்பத்தீராயிர வருஷ காலம் ஏகச் சக்கரவர்த்தியாய் ஆள்க என்று அருள் பாலித்தார். விதூரகன் முசுமுகச் சோழன் என்னும் பெயரோடு சோணாட்டில் அவதரித்துக் கருவூரைத் தலைநகராகக் கொண்டு அரசு புரிந்தான்.

முசுமுகச் சோழன் தன் முன்னோர்களைப் போல தானும் திக் விஜயம் செய்ய எண்ணி, அதற்குத் தக்க துணைகளைப் பெறவேண்டி வசிட்ட முனிவர் உபதேசப் படி சஷ்டி விரதத்தை முறைப்படி செய்து வந்தான்.

இவ் விரதத்தின் பயனாக முருகப் பெருமான் என் பான் வீரரோடு மயில்மீது வந்து அம்மன்னனுக்குக் காட்சி தந்து, மன்னன் கேட்டபடி வீரவாகு தேவர் முதலிய தேவர்களைப் படைத் துணைவராகத் தந்தார். நவ வீரர்கள் மானிடன் பக்கம் சென்று தொழில் புரிய மறுக்கவே, முருகப் பெருமானின் கோபத்திற்கும் சாபத் திற்கும் ஆளாகி மானிடப் பிறப்பெடுத்தனர். செங் குந்தர் என்னும் பெயர் தாங்கி இவர்கள் மன்னனுக்குப் பணிபுரிந்தனர். இச் செங்குந்தரைத் துணையாகப் பெற்றமையால் மன்னனுக்கு முசுகுந்தன் எனும் பெயர் வழங்கலாயிற்று.

இவ்விதம் இருக்கின்றபோதுதான் வீரவாகுதேவர் புட்பகந்தியை மணந்து சித்திரவல்லி என்னும் பெண் மகவையும் அனகன் சனகன் என்னும் ஆண் மகவையும் ஈன்றெடுத்தார். இவ்வாறே ஏனைய வீரர்களுக்கும் பிள்ளைகள் தோன்றி, பெரும் புகழை எங்கும் நிலைபெறச் செய்தனர்.

## தியாகராசப் பெருமானைப் பூமியிற் கொணர்ந்த சிறப்பு

**விண்டு மார்பத் திடையிருத்தி வேலைக் கௌரி பணிமாறப்
பண்டுபூசித் திடுங்காலை யாகண்டலன் போய்ப் பாற்கடலின்
வண்டுழாய்மா யனைவணங்கி வானிற்பழிச்சும் தியாகரை மேற்
கொண்டு போந்து பாரின் முசு குந்தற் குதவுஞ் செங்குந்தம்.**

(இ-ள்) முன் காலத்தில் திருமால் தியாகராசரைத் தன் மார்பின்கண் எழுந்தருளச் செய்து பாற்கடலில் பிறந்த இலக்குமி பணியும்படி பூசித்திருந்தார். இந்திரன் வாற்கலி என்னும் அசுரனால் துன்பமடைந்து துழாய் மாலை அணிந்த மாயனை வணங்கினான். அவரால் அத் துன்பத்தை நீக்கிக் கொண்டதுமன்றி அவரிட மிருந்த தியாகரையும் பெற்று சுவர்க்கத்தில் கொண்டுபோய் பூசித்து வந்தான்.

அப்போது வலன் என்னும் அவுணன் இந்திரனை எதிர்த்தான். அவ்வலனைப் புறம்காண முடியாமையால் இந்திரன் முசுகுந்தச் சக்கரவர்த்திக்கு அறிவித்தான். முசுகுந்தன் வீரவாகு தலைமையில் சேனை அனுப்பி வலனை வெல்லச் செய்தான். இவ்வுதவிக்கு மகிழ்ந்த இந்திரன் நவ வீரர்களைப் பார்த்து நீங்கள் செய்த நன்றிக்கு என்பாலுள்ள பொருள்களில் வேண்டுவனவற்றைக் கேளுங்கள் கொடுப்பேன் என்று கூற, அவர்கள் அவ்விந்திரன் வசம் ஆன்மார்த்தமாக உள்ள தியாகரைக் கேட்டனர். அதைக் கொடுக்க மனமில்லாத இந்திரன் விசுவகர்மாவை அழைத்து ஆறு தியாகரைச் செய்வித்து ஒவ்வொன்றாகக் கொடுக்க, அது அலல அது அல்ல என்று மறுத்து, மூல விக்கிரகத்தைக் கேட்டனர். அப்போது மறுக்க முடியாத நிலையில் அவன் ஆன்மார்த்த மூர்த்தியை வழங்கினான். நவ

வீரர்கள் அதனைக் கொண்டுவந்து முசுகுந்த மன்ன னிடம் தந்தனர். அம்மன்னர் பிரானால் திருவாரூர் முதலிய சத்தத் தலங்களில் அவை ஸ்தாபிக்கப் பெற்றன. அச்செயலைச் செய்த பெருமை செங்குந்தத் திற்கே உரியது.

## செங்குந்தத் தலைவர்கள் கிளிப்பிள்ளையின் பொருட்டு இயமனுக்குத் திருமுகம் அளித்த சிறப்பு

பிள்ளை யாருயிர்க் குறுந்துணை யாத்தனிப் பேறெய்துங்
கிள்ளை யாரிவண் கொடுவரு கென்றுடலங் கீறிக்
கொள்ளையாருயிரெரி நரகுறவடுங் கூற்றுயிர் நனிசோர
வள்ளி யாவரு நடுங்கத் தந்திருமுகமே செலுத்துவொண்குந்தம்.

(இ—ள்) யாவரும் நடுநடுங்கும்படி வீரத்தைச் செலுத்தி உலகிலுள்ள உயிர்களை எரிநரகில் சேர்த்துக் கொல்லுகின்ற இயமனுக்கு, அவனுயிரும் பதைபதைக் கும்படியாக, "முசுகுந்தச் சக்கரவர்த்தி மனைவியும் வீரவாகு தேவருடைய பெண்ணுமாகிய சித்திரவல்லி அம்மையார் வளர்த்த தன்னுயிர்க்கு மிக்க துணையாக இருந்த ஒப்பற்றத் தவப் பேற்றையுடைய கிளிப் பிள்ளையை உமது தூதுவர் திருடிப் போயினதாகக் கேட்டோம். அதை இந்நிமிடமே இங்கு கொண்டுவர வேண்டும்" என்று திருமுகம் அனுப்பியவர் செங்குந்தப் பெருமக்களாவர்.

வரலாறு: பூவுலகில் முசுகுந்தச் சக்கரவர்த்தி அரசாண்டுகொண்டிருக்கும்போது ஒரு பிரளயம் உண் டாகி எல்லாம் அழிந்து போயின. சக்கரவர்த்தி தன் துணைவரோடு கிளியுருக் கொண்டு சுவர்க்கம் சேர்ந் தார்.

ஒரு நாள் கைலை மலையடைந்து உமாபதியை வணங்கி நின்றார். யாது வேண்டும் எனக் கேட்ட இறைவனிடம் தன் குறை எடுத்துரைத்தான். சிவ பிரான் பழைய நிலை பெற்றுச் சிறக்க என வாழ்த்த, மீண்டும் சிறக்க ஆள எமக்கொரு பத்தினி வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். இறைவன் ஆணைப்படி வீரவாகு தேவரின் செல்வியாகிய சித்திரவல்லியை மணந்து சுற்றத்தோடு சிறப்பாக ஆட்சிபுரிய பூவுலகம் வந்தார்.

வரும்போது இந்திராணி அம்மையார் தாம் அருமையாகப் போற்றி வளர்த்த கிளிப்பிள்ளை ஒன்றை சித்திரவல்லிக்குப் பரிசாகக் கொடுத்தார். பூலோகத்தில் பழைய நிலை பெற்று ஆட்சி புரிந்து கொண்டிருக்கும் போது சித்திரவல்லியிடம் இருந்த கிளிப்பிள்ளை மேல் இமயதர்மன் மனைவிக்கு ஆசை வந்தது. காலதூதர் மூலமாக அக்கிள்ளையைத் தன்னிடம் வரவழைத்துக் கொண்டார். கிள்ளையைக் காணாது வருத்தமடைந்த சித்திரவல்லியைத் தேற்ற தூதுவர்களைப் பல இடங் களுக்கும் அனுப்பினர். இயமன் தேவியிடம் கிள்ளை இருப்பது அறிந்து வீரவாகுதேவர் நமனுக்கொரு திருமுகம் எழுதினார்.

அத்திருமுகம் 'சமனுவதி நகருக்கு அதிபனாகிய நமனாருக்கு வீரரில் வீரனாகிய வீரவாகு தேவன் அறி விப்பது யாதெனில், முசுகுந்தச்சக்கரவர்த்தி மனைவியும் எனது புத்திரியுமாகிய சித்திரவல்லி அம்மையார் வளர்த்துவந்த தேவலோகக் கிளிப்பிள்ளையைப் பிடித் துப் போனதாகத் தெரிகிறது, அதனை இக்கணமே கொண்டுவந்து சேர்த்திடுக' என்று எழுதி ஒரு தூத னிடம் கொடுத்து யமலோகம் அனுப்பினர்.

திருமுகம் பெற்ற தூதுவன் சமனுவதிநகர் சென்று இயமன் கையில் தர, அதுகண்டு கலங்கிய இயமன் மனைவியிடம் சென்று கிளிப்பிள்ளையைக் கொடுத்துவிட வேண்டினுன். அவள் யாதுஞ் சொல்லாது, கிளியை யும் விடாது இருக்கவே தூதன் வறிதே திரும்பினுன்.

செய்தி கேட்ட வீரவாகு தன் தம்பியர்களோடு சென்று எமனை வளைத்து வென்று கிளிப்பிள்ளையை வாங்கிக் கோடுத்து உபச்சாரம் பல செய்தனுப்பினுன். கிளிப்பிள்ளையை மீண்டும் கொணர்ந்து தன் திருமகளா ரிடம் கொடுத்து மகிழச் செய்தது குந்தத்தைக் கையில் கொண்ட வீரவாகு உள்ளிட்ட நவ வீரர்களின் சிறப்பே யாகும்.

## செங்குந்தத் தலைவர்கள் கேரள தேசத்தரசனை வென்றமை கூறியது

வடிவே லெடுத்த மனுதுங்க
வளவன் றேவி வெதுப்பாற
முடிவேள் வயிற்செந் தீத்தருநாள்
முளைமாங் கனிக்கா குடநாட்டைச்
செடிவே ரறுத்துச் சிறையிட்டுச்
சென்னி வியப்பத் திறைபோலக்
கொடிவாண் முரசு களிறுபரி
யிரதங் கொடுக்குஞ் செங்குந்தம்.

(இ-ள்) கொல்லன் உலையில் வடித்தெடுத்த வேலைக் கையில் தாங்கிய மனுநீதி தவருத பெருமையுடைய முசுகுந்த சோழன் மனைவியாகிய சித்திரவல்லி அம்மை யார், கேரள தேசத்தரசன் செய்வித்த யாக்காகினி தந்த சந்தான மாங்கனி கிடையாததால் கொண்ட கோபம் நீங்க வீரவாகு தேவரது தம்பிமார்கள் குடநாட்டிலுள்ள

அம்மாமரத்தை வேரோடு பிடுங்கிக் கொண்டுவந்து தங்கள் மன்னனாகிய சோழராசன் ஆச்சரியம் அடையும் படி கேரள மன்னனையும் சிறையிட்டுக் கொடி வாள் பேரிகை யானை குதிரை தேர் இவைகளைத் திறையாகக் கொண்டுவந்து கொடுக்கும்படி செய்தது இச் செங் குந்தம்.

வரலாறு: முசுகுந்தச் சக்கரவர்த்தியின் மனைவி யாராகிய சித்திரவல்லி கர்ப்பமடைந்த காலத்தே இனிய காய் கனி கிழங்குகளை உண்ண ஆசையுற்றாள். மன்னன் தூதுவர்களை மலையாள நாட்டிற்கனுப்பினான். மலையாள மன்னன் அவர்களை மதிக்காமல் அனுப்பிவிட்டான். இதுகண்ட சக்கரவர்த்தி வீரவாகு தேவர் முதலிய வீரர்களை அனுப்பினார். நால்வகைப் பகைப் படையோடு சென்ற நவவீரர்கள் ஒரு பகல் நேரத்தில் பதினெண் மலையாளங்களையும் போரில் வென்று காய் கிழங்குகளைக் கொண்டுவந்து சேர்த்ததோடு மட்டு மல்லாது தோற்ற மன்னர்களின் சிரங்களையும் கொண்டு வந்து சேர்த்தனர்.

## சுபன் யாழ்ப்பாண தேயம் வென்றது

ஆழநீள் கடற்கு மாங்கோ ரம்பிமேற் சென்றே யப்பாற்
சூழ்திருச் செந்தூ ருற்ற சுபனென்பான் றுணையாய்க் [கொண்டு
வாழிரா சாதிராச மன்னவன் மருவ லான்றன்
ஈழநா டொருநா டன்னிற் றிறைகொண் டென்டுற்ற குந்தம்

(இ-ள்) ஆழமும் நீளமும் உடைய கடலைத் தாண்டுவதற்குக் கப்பலில் சென்று திருச்செந்தூர் திருப்பதியில் சுபன் என்னும் செங்குந்தத் தலைவனைத் துணையாகக் கொண்டு மேலான செல்வத்தோடு வாழ்ந்த இராசராச

ளுகிய தங்கள் சோழ மன்னனுக்குப் பகைவருக இருந்த யாழ்ப்பாண தேச மன்னனை ஒரு நாளில் செயம்கொண்டு அங்குள்ள பொருள்களைக் கப்பமாகக் கைக் கொண்டு வந்தவர் செங்குந்தராவார்.

ஆழநீள் கடற்கு மாங்கோர் அம்பி எனும் தொடர் ஆழ நீர்க் கங்கை அம்பி கடாவிய எனும் கம்பன் பாடலடியோடுள்ள தொடர்பு காண்க.

## கௌதன் உச்சினியை வென்ற சிறப்பு

**மச்சநா டுடைய கோமேல் வங்கநா டாளு மன்னன்**
**குற்சா வரசற் காகச் சமர மேற்கொண்டு கொற்றக்**
**கைச்சலி யாமற் கொல்லுங் காலையில் கௌத னென்பான்**
**உச்சினி தொடகிப் போர்செய் குந்தம் போலுலகி**
**லுண்டோ?**

(இ. ள்) வங்க நாட்டை யாளுகின்ற அரசனுனவன் குச்சர தேசத்து அரசன் நிமித்தம் மச்சதேசத்து அரசன் மேல் யுத்தத்தை மேற்கொண்டு வெறறி பொருந்திய தன் கைச் சலிப்பின்றி அழித்த நேரத்தில் கௌதன் என்னும் செங்குந்தத் தலைவன் கோபம் மீறி உச்சினி தேசம் தொடங்கி அவர்கள் தேசங்களை எல்லாம் நாசம் பண்ணி அடங்கச் செய்தான்.

விளக்கம்: பிறருக்குத் துணை புரியும் பான்மையில் செயல் பட்டது செங்குந்தம் என்பது தெரிவிக்கப் பட்டது.

## படைமருதன் சிறக்கையானை வென்ற சிறப்பு

**இடை மரு தூரில் சாப மேந்திய சிறக்கை யானை**
**புடை மரு தடியின் வீழப் பொருதியே புறங்கொடாது**
**விடை மழு வுடையான் பாதமென் கமலத்தில் சேர்த்த**
**படைமரு தன்கைக் குந்தம் போலினிப் பாரிலுண்டோ?**

(இ. ள்) திருவிடை மருதூரிலே அரசாட்சி செய்து கொண்டிருந்த படை மருதன் என்னும் செங்குந்தத் தலைவன் கையில் வில்லும் பாணமும் ஏந்தி யுத்த சன்னத்தனுக வந்த சிறக்கையான் என்னும் பகைவனைப் புறங்கொடுத்து ஓடாமல் செய்து மருதமரத்தி னடியில் விழும்படி யுத்தம் செய்து, இடப வாகனமும் மழுவாயுதமும் உடையானுகிய பரமசிவனது மிருது வான தாமரை மலர் போன்ற திருவடியில் சேர்த்தான். படை மருதனுக்குத் துணையாக நின்ற குந்தம்போல் உலகில் வேறுண்டோ?

## வங்க தேயம் வென்ற சிறப்பு

**கூளிபா றின மிடங் கொண்டு சுற்றவே**
**காளிசா தகரெலாங் களத்தி லாடவே**
**வாளிதொட் டெழுமொரு வங்கக் கோவை முன்**
**றோளிணை யாற்பொருந் துங்கைக் குந்தமே.**

(இ. ள்) கழுகுகளும் பருந்துகளும் இடமும் வலமு மாகச் சுற்றி வரவும் காளியும் அவளது பரிவாரங் களும் யுத்தகளத்தில் நடனம் செய்யவும் பாணப் பிர யோகங்களைச் செய்த ஒரு வங்க தேசத்தரசனை ஆதியில் செங்குந்தத் தலைவர்கள் தமது இரண்டு தோள்களினு லும் பொருது செயம் கொண்டது இப்பெருமை பொருந் திய செங்குந்தம்.

## செங்குந்தர்க்கு எங்கும் எதிரின்மைச் சிறப்பு

**வானைவென் றுவரிசூழ்ந்த மண்ணை வென்றவுணரான**
**கானைவென் றம்புராசிக் கடலைவென் றருங்கலிங்கன்**
**சேனைவென் றலங்கன் மார்பஞ் செறியுமா மடங்கல் வையக்**
**கோனைவென் றரியவாகைக் கொண்டென திரியுங் குந்தம்.**

(இ.ள்) இச் செங்குந்தமானது வானுலகப் பகைவரை வென்று, கடலால் சூழப்பட்டுள்ள நிலவுலக மாற்றலரை வென்று, அவுணர்களாம் காட்டை வென்று அம்புராசி என்னும் கடலை வென்று, வெல்லுதற்கரிய கலிங்க தேசத்து அரசனோடு அவனது நால்வகைச் சேனையை வென்று, மார்பினிடத்து வெற்றிமாலை பொருந்திய பெரிய சிங்கத்தை யொத்தவையைக் கோன் என்னும் அரசனை வென்று, கிடைத்தற்கரிய அவ் வெற்றி மாலையை மேற்கொண்டதென்று யாவரும் சொல்ல உலகமெங்கும் சஞ்சரிக்கும்.

விளக்கம் : சென்ற இடமெல்லாம் செயமன்றி வேறில்லை என்னும் சிறப்பு செங்குந்தத்திற்குண்டு என்னும் செய்தி கூறப்பட்டது.

## திறை வாங்கும் சிறப்பு

**செங்கோ னடத்தும் வளவனிட்ட சிங்காதனத்தி லினிதிருந்த**
**நங்கோன் கவியே கவியென்று நாட்டிக் கவிபுன் கலைகளைந்து**
**வங்கோ டீழங் கன்னுட மாராட்டிரங் குச் சரஞ்சீனங்**
**கொங்கோ டெங்குந்தரத் திறையே கொள்ளு மின்னார்செங்**
**குந்தம்.**

(இ-ள்) கையில் தாங்கிய குந்தமானது மனுநீதி வழாது செங்கோல் நடத்திய சோழராசனால் இடப்பட்ட சிங்காதனத்தில் இனிது வீற்றிருந்து கூத்தனால் சொல்லப்பட்ட கவியே கவியென்று உலகில் நிலைபெற

வைத்து மற்றைப் புன்கவிகளாகிய களைகளை அறவே களைந்து வங்கம் ஈழம் கன்னடம் மராட்டிரம் குச்சரம் சீனம் கொங்கம் முதலிய ஐம்பத்தாறு தேசங்களும் திறை கொடுக்கப் பெற்று அரசாட்சி செய்தது.

விளக்கம்: என்றும் ஏத்தப்படும் பெருஞ் சிறப்பு கொண்ட கூத்தன் கவியே கவி. ஏனைய புன்கவிகளைக் களைக என்றும் கூறப்பட்டது.

## செங்குந்தர் மரபுக்கும் சோழன் மரபுக்கும் கொடி புலிக் கொடியே

**கலிக்குறும் படுவள வனுக்கும் காதுசூர்**
**பலிக்குறும் படுதனி வாகைக் குந்தர்க்கும்**
**பலிக்குநற் புகழெலாம் பாதி யாதலாற்**
**புலிக்கொடி மரபிரண் டினுக்கும் போந்ததால்.**

(இ-ள்) இவ்வுலகில் தரித்திரம் என்னும் பொல்லாங்கை நிலை பெறாது அழிக்கின்ற சோழனுக்கும், போர் செய்கின்ற சூரபதுமனது வல்லமை நிலைபெறாது அழித்த செங்குந்தர்க்கும் கிடைத்திருக்கின்ற நல்ல புகழெல்லாம் இருவர்க்கும் சமமாக இருக்கின்றபடியினால் புலிக் கொடியும் இவ்விரு மரபின் உள்ளார்க்கும் கிடைத்ததாம்.

விளக்கம்: ஏழைமை எங்கிருந்தாலும் அதனை ஓட்டும் இனிய பணி சோழனுடையது என்பதால் கொடைச் சிறப்பை சோழர்க்கு வழங்கினர். சூரபதுமனை அழித்தமையால் வாகைபெற்ற செங்குந்தர்க்கு வீரமாகிய படைச் சிறப்பைத் தந்தார். புகழ் இருவர்க்கும் பாதி பாதியாகவே போய்ச் சேருகின்றபடியால் கொடியும் பொதுவாகவே அமைந்து விடுகிறது என்று கொடிச் சிறப்பு காட்டப்பட்டது.

## செங்குந்தர் சோழனுக்கு உரிமையாம் சிறப்பு

**தென்னனைச் சேரனைச் சிறுமை சொல்லவும்**
**மன்னனை வளவனை மகிழ்ந்து பாடவும்**
**பன்னருஞ் சாரதி படைத்த பான்மைபோல்**
**ஒன்னலர்க் குள்ளினத் துற்ற குந்தமே.**

(இ-ள்) பாண்டியனையும் சேரனையும் பழித்து அவர்களைச் சிறுமையாகச் சொல்லவும், இராசாதிராசன் என்னும் சோழனாகிய தன்னை மகிழ்ச்சியோடு புகழ்ந்து பாடவும் சொல்லுதற்கரிய கீர்த்தியினையுடைய ஒட்டக் கூத்தன் என்னும் புலவனாகிய என்னைத் தன்னினத்தில் படைத்த தன்மை போல பகைவர்களைச் செயம் பண்ணு தற்குத் தன்னினத்துள்ளே பொருந்திய செங்குந்தர் களைப் படைத்தான்.

விளக்கம்; ஒன்னலர் - பகைவர். ஒட்டக்கூத் தனைத் தன் இனத்தார்க்குரிய புலவனாகக் கொண்டிருப் பது சோழ இனத்தார்க்கே மிகுதியும் பெருமையாம். 'பாடும் புலவர் பணியொட்டக் கூத்தன் பதாம்புயத் தைச் சூடும் குலோத்துங்கச் சோழன் என்றே எனைச் சொல்லுவரே'—என்று குலோத்துங்கனே பெருமை கொண்டிருந்தான்.

## வேலும் குந்தமும் வேறில்லை

**சேல்வேறு புலிவே றுகுஞ் சேதுவி னளவாய்ச் சென்னி**
**கோல்வே றில்லாம லோச்சிக் கன்னியை கொள்வனென்றே**
**மால்வேறு சிவன்வே றென்ன வழுத்திடா வன்மை போல**
**வேல்வேறு குந்தம்வே றென்றிரு பொருள் விளம்பார்**
**மேலோர்.**

(இ-ள்) மீன் கொடியும் புலிக்கொடியும் கொண்டு பாண்டியனும் சோழனும் அரசாண்ட இமய முதல் சேது வரை முசுகுந்த சக்கரவர்த்தி ஆண்டு கன்னியா குமரியையும் கைக்கொண்டான். திருமால் வேறு சிவன் வேறு என்று பிரித்துப் பார்க்க முடியாதவாறு போல, முருகக் கடவுள் கையிலுள்ள வேலாயுதம் வேறு நவ வீரர்கள் கையிலுள்ள குந்தம் வேறு என்று இருபொருள் சொல்ல மாட்டார்கள் பெரியோர்கள்.

விளக்கம்: வேலாயுதம் எவ்வாறு வரம்பல தந்து சிறப்பு செய்யுமோ அதுபோல குந்தர் கையில் கொடுத்த குந்தமும் சந்தத் தொழிலைத் தடையறுது செய்தலால் அந்தப் படைக்கும் இந்தப் படைக்கும் வேறுபாடு கிடையாது என்று மேலோர் கூறுவர்.

## குந்தப் பெருமை

**பூமாலை கடப்பந் தாமம் பூண்மணித் தெரியல் செய்ய**
**பாமாலை தன்னைக் கைக்கொள் முதலியர் பங்கதாக்கி**
**மாமாலை யொல்லார் காலில் வழிதுழிக் குடரின் மாலை**
**தேமாலை யாகச் சூடுஞ் செங்குந்தம் போலுமுண்டோ.**

(இ-ள்) பூமாலை, கடப்ப மாலை, சந்திராரங்கள், இரத்திஞரங்கள் புலவராலியற்றிய குற்றம் நீங்கிய செவ்விதாகிய, பாமாலைகள் இவைகளையெல்லாம் கையிற் கொண்ட முதலியார்கள் பக்கம் நின்று, மயக்கத்தை யுடைய பகைவர்களின் சந்ததிகளின் குடர் மாலைகளைத் தேன் பொருந்திய மலர் மாலையாகத் தான் தரித்துக் கொள்ளும் செவ்விய குந்தம்போலும் உலகத்தில் உண்டோ?

விளக்கம்: பூமாலை கடப்ப மாலை போன்ற அருள் வழங்கும் நன்மாலைகள் ஒருபுறம் சேர்ந்திருக்க, மறுபுறம்

பகைவர்களை அழிக்கும் தன்மையால் வீரமாலை ஏற்றருளும் குந்தமும் இணைந்துள்ளமை இருமடங்கு சிறப்பாம் என்க.

## குந்தத்தின் குதூகலம்

பற்றினும் பற்றுஞ் சென்னி பறிக்கினும் பறிக்கும் பாசம்
எற்றினும் எற்றுங் கூற்றை யீரினும் ஈரும் வாரிச்
சுற்றினும் சுற்றும் அண்டம் துகளெழச் செயினும் செயும்
மற்றினும் குந்தம் போற்று திருப்பவ ருளரோ மண்மேல்.

(இ-ள்) நவ வீரர்கள் கையிலுள்ள குந்தமானது இயமனையே பிடிக்க வேண்டுமானாலும் பிடிக்கும். அவன் தலையைப் பறிக்க வேண்டுமானாலும் பறிக்கும். அவன் பாசத்தைப் பிடுங்கி எறிய வேண்டுமானாலும் எறியும். அவனையே பிளக்க வேண்டுமானாலும் பிளக்கும். அவனை எடுத்துக் கரகரவென்று சுழற்ற வேண்டுமானாலும் சுழற்றும். அண்டங்களைத் துகளெழச் செய்ய வேண்டுமானாலும் செய்யும். இத்தகைய செயல் புரியும் குந்தத்தை இவ்வுலகில் போற்றாதவருண்டோ?

## குந்தத்தின் வீரம்

போற்றியோ போற்றி யென்று புதுமலர் தூவிச்சீற்ற
மாற்றியே வந்தி யாம லடையலர் வாழ்ந்திருந்தால்
காற்றென வூழித் தீயிற் கடலெனக் கொடிய கோபக்
கூற்றெனத் திரிந்து சோரிக் குளித்துடன் களிக்கும்குந்தம்.

(இ-ள்) பகைவர்கள் தமது கோபங்களை மாற்றிக் கொண்டு புதிய மலர்களால் அர்ச்சித்துப் போற்றியோ

போற்றி என்று வணங்காது வாழ்ந்திருந்தால் குந்தப் படை ஊழிக் காலத்தைப் போலவும், கடலைப் போல வும், இமயமலையைப் போலவும், கோபம் கொண்டு அவர்கள் எங்குளர் என்று தேடி அப்பகைவர்களைக் குத்தி அவருடலினின்றும் பெருகும் இரத்த வெள்ளத்தில் மூழ்கிக் களிப்படையும்.

அடையலர்-பகைவர்.

## பழுவூர் வீரன் சிறப்பு

**சூட்டும் வீர வாகுவெனச் சொல்லும் பழுவூர் வீரனமர்**
**மூட்டுங் கால மூழி வெள்ள மூடுங் கால மாகாதோ**
**வேட்டங் காலில் வீழாதார் மேலு முளரோ வீதியுலா**
**யீட்டுங் காலங் குந்தங்கண் டெழுமே கழுகு பருந்துகளும்.**

(இ-ள்) முடிசூட்டப் படுகின்ற வீரவாகு தேவருக்கு ஒப்பானவனென்று சொல்லப்படும் வழுவூரில் வாழும் வீரன் என்னும் செங்குந்தத் தலைவன் யுத்தமாகிய நெருப்பை மூளுவிக்குங் காலமானது ஊழிக் காலத்து வெள்ளத்தினால் மூடப்படுகின்ற சர்வ சம்ஹார கால மாகுமோ? அவன் காலில் வந்து விழ்ந்து வணங்காதார் பின்னும் உயிரோடு வாழ்வாரோ? வீதியில் பவனி வருங் காலத்து அவன் கையிலுள்ள குந்தத்தைக் கண்டு கழுகினங்களும் பருந்துக் கூட்டங்களும் ஆகாயத்தில் எழுந்து வட்டமிடும்.

விளக்கம் : பழுவூர் என்னும் அட்ட வீரட்ட தலங் களில் ஒன்றான திருப் பழுவூரில் சிறந்த ஆற்றல் கொண் டவனாக செங்குந்தர் குலத்தில் தோன்றி வாழ்ந்தவன் வீரன் என்பவனாவான்.

## பழுவை நாராயணன்

**காராமுருவ மொழிந்து பொன்னின் கவினுர்பழுவை வளம்பதியில்**
**நாராயணனே விக்கிரம நாராயணனு மென்னுதார்**
**வாராவழி வந்தோ மென்றே வாயிற் புல்லேக் கவ்வி வந்தச்**
**சேரார் சேரா நின்றுதொழ செய்யுமன்னன் செங்குந்தம்.**

(இ-ள்) மேகம் போன்ற இருள் நிறத்தைவிட்டு பொன் போன்ற அழகிய உருவத்தைக் கொண்டு வளம் மிக்க பழுவை என்னும் நகரத்தில் வாழும் நாராயணன் என்னும் செங்குந்தத் தலைவனே திருவிக்கிர அவதாரம் செய்த நாராயணனும் என்று கருதாத பகைவர்கள், போருக்கு வரத்தகாத இடத்து வந்தோமென்று வாயிற் புல்லேக் கவ்விக்கொண்டு எதிராக வந்து தளர்ந்து தொழும்படி அவன் கையிலுள்ள சிவந்த குந்தமானது செய்யும்.

பழுவூரில் வாழ்ந்த நாராயணன் சிறப்பை இப்பாடல் பகர்கின்றது. மண்ணுலக மன்னன் விண்ணக இறைவர்க்கு நிகரானவன் என்னும் கருத்தமைய இப்பாடல் அமைந்துள்ளது.

வரலாறு: முன் பாட்டில் உரைத்த வீரன் என்பவனும் இப்பாட்டில் கூறிய நாராயணன் என்பவனும் சோழ நாட்டுத் திருப்பழுவூரில் அரசாண்ட கோமதி என்னும் மன்னனுக்கு இரட்டைப் பிள்ளேகளாகத் தோன்றியவர். இவர்களே இராம லட்சுமணர், சூர பதுமன் சம்பாதி என்பது போல வீர நாராயணன் என்றே உலகம் அழைத்தது. இவ் வீர நாராயணக் கூட்டத்தார் தான் பராந்தகச் சோழன் வல்லான் என்னும் இரட்டனே வென்று சோழநாட்டில் தம் அரசாட்சியை நிலேபெறச் செய்தனர் என்பது வல்லான் காவியம் வீர நாராயணச் சருக்கத்தில் சொல்லப்படும் செய்தி.

## கச்சித் தனியன் சிறப்பு

இனி மாநிலத்திற் கண்டதில்லை கேட்டிருத்தலன்றிப் பெரும்
பனிமால் வரையு மைநாக முன்பின்படைதா னெடுத்தாலு
முனிமாறுண்டோ நடுநின்று முடிப்பான் கச்சித் தனியன் வட்டத்
தனிமா நிழற்கீழ்ச் செங்குந்தஞ் சரணாகதிக்கு வைகுந்தம்.

(இ-ள்) யாதொரு நியாயங்களையும் நடுவு நிலைமையாக நின்று முடிவு செய்யும் பொருட்டுக் காஞ்சீபுரத்தில் ஒப்பற்ற மாமரத்தினது வட்டமான நிழலின்கண் இருந்து நடத்தும் தெய்வ சிம்மாசன கர்த்தராகிய செங்குந்தத் தலைவர் ஆயிரத்துத் தொளாயிரவருள் ஒருவனாகிய கச்சித் தனியன் என்பவன் பகைவர்கள் கண்டவுடன் சரணாகதி அடையச் செய்யும் குந்தம் கைக்கொண்டு இருப்பதால், குளிர்ச்சியைத் தரும் பெரிய பர்வதராசனும் மைநாகமும் முன்னும் பின்னும்படையெடுத்து வந்தாலும் கோபிப்பது உண்டோ? இம்மாவீரனது பெரும் புகழைக் கேட்டிருத்தலேயன்றி இப்போது இவ்வுலகத்தில் யாரிடத்தும் கண்டதில்லை.

வரலாறு: காஞ்சீபுரம் என்ற பெருநாட்டில் இருந்தரசு செய்துவரும் கச்சித் தனியன் என்பவன் செங்குந்தத் தலைவர் ஆயிரத்துத் தொளாயிரவருள் ஒருவன். இவன் பதும வண்ணன் என்னும் மன்னனுக்கு ஒரே புத்திரனாக வந்தவன். தனியன் இளவரசனாக இருக்கும் போதே பதும வண்ணன் இறைவனடி சேர்ந்தான். அது கண்ட மறுபுலத்தரசர் இவன்மேல் படை எடுத்துவர அவர்களைப் போரில் புறங்கண்டு வெற்றி மாலைசூடி காஞ்சி மாவடியின்கீழ் தேவ சிங்காதனத்திருந்து நீண்ட நாள் அரசாண்டுவந்தான். வல்லான் காவியத்தில் தேவ சாட்சிச் சருக்கம் இவ்வரலாற்றை எடுத்துக் கூறும்.

## ஒற்றியூரான் சிறப்பு

**உடலமண் மேலுயிர் விண்மேலால்லா ரொடுங்கவுதிரமொடு**
**குடருங் கொழுவுங் கழுகோடுங் கொள்ளை கொள்ளப் பரிந்தூட்டு**
**மடல்வெண் டாழை முகமலர வாரிவாரித் திரைக் கரத்தால்**
**கடல் வெண்டாளமே யெறியு மொற்றியூரன் கைக்குந்தம்.**

(இ-ள்) மடலையுடைய தாழையினது வெண்மலரின் முகமானது மலரும்படி கடலானது அலைகளாகிய கைகளினால் வெள்ளிய முத்தங்களை வாரி வாரி வீசுகின்ற வளப்பம் பொருந்திய ஒற்றியூரனது கையின் கண்ணுள்ள குந்தமானது பகைவர்கள் உடலை மண்ணின் மீதும் உயிரை விண்ணின் மீதும் விட்டு அவர்தம் உதிரத்தையும் குடரையும் கொழுப்பையும் கழுகும் பருந்தும் காக்கையும் கொள்ளை கொண்டு உண்ண ஆசையோடு உண்டாக்கும்.

இத் திருவொற்றியூரன், ஆதிபுரியில் எழுந்தருளிய விநாயகப் பெருமானுக்கு ஆலயம் சமைப்பித்துத் தம் குலப் பெயரால் அம்மூர்த்தியை நாளும் வழிபட்டு வந்தான் எனத் தெரிகிறது.

இவ்வொற்றியூரன் சுதனகன் என்னும் வேந்தனுக்கு மகனாகப் பிறந்தவன். இவன் மாணிக்கத் தியாகருக்குத் தனியாக ஒரு நந்தவனம் அமைத்து அதில் உற்பத்தியாகும் புஷ்பங்களை எடுத்துக் காலை உச்சி மாலை வேளைகளில் பெருமானை அர்ச்சித்து வந்தான். அந்நாளில் அனலன் என்னும் ஓர் அரசன் அந்த நந்தவனத்தில் வந்து சேர்ந்து பல உயிர்களுக்குத் துன்பத்தை விளைவித்தான். அதுகண்ட ஒற்றியூரன் அவ்வனலனைத் தன் கைக் குந்தத்தினால் கொன்று உலகிற்குச் க்ஷேமத்தை உண்டாக்கினான் என்பதனை வல்லான் காவியம் தேவசாட்சிச் சருக்கம்.

## களத்தூர் அரசன் புகழ்

தளர்ந்த வர்க்குத் திருவுருவம்
　　தன்னை யடையார்க் கொருசிங்கம்
இளந்தைய வர்க்குச் சிலைவேணல்
　　இசையாற் பொற்பூ தரமேயாம்
வளர்ந்த சாலி வரம்பினில் வால்
　　வளைகண் முத்தந் தரும் வளங்கூர்
களந்தை யாதி நகரரசன்
　　கைகுந்தம் போற் காணேமே.

(இ-ள்) தளர்ந்துவந்து தன்னை அடைந்தவர்களுக்கு முகமலர்ச்சியோடு அழகிய உருவத்தை உடையவன், வணங்காத பகைவர்களுக்குச் சிங்கம் போன்றவன், இளம் பருவப் பெண்களுக்குக் கரும்பு வில்லையுடைய மன்மதன் போன்றவன். புகழுக்குப் பொன்மலையை ஒப்பவன். நெற்பயிர் வளரும் வயலின் வரம்பில் வெள்ளிய சங்கினங்கள் முத்துக்களை ஈனும் வளம் மிக்க களந்தை நகருக்கரசன் கையிலுள்ள குந்தத்தினது புகழைப் போல எங்கும் கண்டதில்லை.

விளக்கம் : களந்தை என்னும் ஊர் தொண்டை நாட்டிலுள்ள பொன் விளைந்த களத்தூர்.

இக்களந்தையரசன் பொன் விளைந்த களத்தூரை ஆண்டுவந்த மதிமான் என்னும் மன்னனுக்கு மகனாகத் தோன்றியவன். சிறந்த சிவபக்தி கொண்டவன். இவனுக்கு மகுடாபிஷேகம் செய்ய எல்லா மன்னர்களுக்கும் திருமுகம் அனுப்பப்பட்டது. குறுநில மன்னனாகிய காட்டுரான் மட்டும் வந்து விழாவில் கலந்துகொள்ளவில்லை. அவனைப் புறங்கண்டு வெற்றிவாகை சூடிய பிறகே மதிமான் தன் மகனுக்கு மகுடாபிஷேகம் செய்வித்தான்

என்று வல்லான் காவியம் தேவகாட்சிச் சருக்கம் கூறும். இக்களந்தை மன்னனே திருத்தொண்டர் அறுபத்து மூவருள் ஒருவரான, கூற்றுவ நாயனர் சந்ததியில் வந்தவர் என்றும் கூறுவர்.

ஆர்கொண்ட வேல்கூற்றன் களந்தைகோன் அடியேன் என்று ஆளுடைநம்பியும், 'கோதை நெடுவேல் களப்பாளுகிய கூற்றுவனே' என்று நம்பியாண்டார் நம்பிகளும் இவ்வரசனைக் குறித்துள்ளார்கள்.

## புற்றிடங்கொண்டான் சிறப்பு

கற்றிடங் கொண்டவர் கவின்சொற் கொள்ளுமே
யுற்றிடங் கொண்டபேர்க் குலகை நல்குமே
வெற்றிடங் கொண்டமே வலரை வீட்டுமே
புற்றிடங் கொண்டவன் பொலிகைக் குந்தமே.

(இ-ள்) புற்றிடங்கொண்டான் என்னும் செங்குந்தத் தலைவனது கையில் தாங்கிய பொலிவு பெற்ற செங்குந்தமானது கற்ற புலவர்களின் அழகு மிக்க பாடல்களைச் சூட்டிக்கொள்ளும். சரணுகதி அடைவோர்க்கு இவ்வுலகத்தையே கொடுக்கும். மாறுபட்ட பகைவர்களை வென்று நாசம் புரியும்.

விளக்கம் : இப்பாட்டில் குறிக்கப்படும் புற்றிடங் கொண்டான் என்பவன் திருவாரூர்ப் பூங்கோயில் தியாகராசப் பெருமான் வழி வழி அடிமை.

திருவாரூரில் அரசச் செல்வத்துடன் வாழ்ந்து வந்தவன் புற்றிடங்கொண்டான். இவன் தந்தையும் இப்பெயரையே பெற்றவன். சிறந்த சிவபக்தி மேலோன். பல புலவர்களால் பாராட்டப் பெற்றவன். நீதிமான்.

அங்க தேசத்து அரசனைக் கலிங்க மன்னன் முறை யின்றித் துன்புறுத்தினன். அங்க நாட்டு மன்னன் புற்றிடங் கொண்டானிடம் முறையிட கலிங்கத்தை வென்று முறையிட்ட மன்னனுக்கே கொடுத்துத வினன். வல்லான் காவியம் தேவசாட்சிச் சருக்கத்தில் இவ்வரலாறு வருகிறது.

## கோளாந்தகன் சிறப்பு

**மூளா வடவைச் சிகரகிரி முடிகம் பிக்கு மாருதஞ்செங்**
**தாளான் மடங்கவொரு கூற்றந் தனிமும் மதிகாய்ச் சிறுமூரல்**
**வேளாருயிரைப் பேர்க்க வனற்கண்ணும் விளங்கு முருத்திரனே**
**கோளாந்தக னெண்டோளான் கைக்குந்தம் வாகைக் குந்தமே.**

(இ-ள்) சதா காலமும் மூண்டெரியும் வடவா முகாக்கினியும், எண்திக்கு மலைச் சிகரங்களும் நடுங்க எமனை உதைத்த சிவந்த பாதமும், திரிபுரத்தை எரித்த புன்முறுவலும் மன்மதனின் உயிர் போக்கிய அக்கினி விழியும் கொண்ட உருத்திரனுக்கு நிகரான கோளாந் தகன் என்னும் செங்குந்தத் தலைவன் கையிலுள்ள குந்தமே வெற்றி பொருந்திய குந்தமாகும்.

வடவா முகாக்கினி—கடலின் கண்ணுள்ள பெண் குதிரை முகம் போன்ற அக்கினி. மார்க்கண்டனுக் காக மறலியை உதைத்ததும், புன்முறுவல் செய்து புரம் மூன்றை எரித்தது, நெற்றிக் கண்ணால் மாரன் உயிரை அழித்தது ஆகிய முச்செயல்களை உருத்திர னுக்குக் குறிப்பிடுகின்றார். இப்பெருமானைப் போன்ற கோளாந்தகனும் பகைவர்களை அழிப்பதில் வல்லவன். இவன் கொடுங்குன்றத்தை ஆண்ட மன்னன் மதிநாத னின் புதல்வன். வேத விற்பன்னன். வில்லாற்றல் மல்லாற்றல் இரண்டிலும் சிறந்தவன். வடபுலத்தரசன் உணங்கனை மல்யுத்தத்தில் வெற்றி கண்டவன்.

## புலியூர்ப் பள்ளிகொண்டான் சிறப்பு

**புண்ட ரீகமே குவளேயே தளவமே பூமாவே**
**பிண்டி யேபெறும் சித்தசன் றன்குணம் பிழையாவெண்**
**கண்ட வீரகண் டன்புலியூர்த்தனி காத்தேசீர்**
**கொண்ட பள்ளிகொண்டான் கரதலத்திடை கொளுங் குந்தம்.**

(இ–ள்) பகைவர்களேப் புறங்கண்ட வீரகண்டா மணியையுடையோனுகிய சிதம்பரம் எனும் நகரத்தே தனியாட்சி செய்து காத்து பல சிறப்புகளேக் கொண்ட பள்ளிகொண்டான் என்னும் செங்குந்தத் தலேவன் கைச் செங்குந்தம் மன்மதன் கையிலுள்ள தாமரை, நீலோற் பலம், முல்லே, மாம்பூ, அசோகம் ஆகிய ஐந்து பாணங் களும் பெற்ற நினேப்பூட்டல் பசலே செய்தல் உணவை நீக்கல் கிடக்கச் செய்தல் கொல்லுதல் ஆகிய ஐந்து குணங்கள் போல, போரை நினேப்பூட்டல் தோள், தின வுறுத்தல், துன்புறுவித்தல், மூர்ச்சையுறுவித்தல், கொல்லல் ஆகிய ஐந்து குணங்களேயும் செய்விக்கும்.

மன்மதன் கை மலர்கள் ஐந்து. அதன் தொழில் களும் ஐந்து. பள்ளிகொண்டானின் கைக்குந்தம் ஒன்று. ஆனுல் அதன் தொழில்களோ ஐந்து என்று பெருமை தோன்றக் காட்டினுர்.

இம்மன்னன் சிதம்பரத்தை யாண்ட விடங்கன் என்பானின் திருமகன். சிதம்பரம் நடராசப் பெருமான் திருக்கருணேயோடு ஆந்திர தேசத்து மன்னன் சிரத் தாமனேப் புறங்கண்டான். அம்மன்னனுக்குச் சுவர்க் கப் பதவி நல்கி பகையின்றி ஆண்டான்என்று வல்லான் காவியம் தேவசாட்சி சருக்கம் கூறுகிறது.

## பிணவன் சிறப்பு

**குணமார் தருமத் தெவ்வேந்தர் குலக்கோளரியே குலத்தருவே**
**துணவா வண்மைச் சகம்பேசச் சகமே தாங்கும் பூதரமே**
**பிணவா வென்று பகராய்வாய் பிளந்து சோரிப் பெரும்பூதக்**
**கணம்வாய் நிரப்புங் குந்தம்போல் காணேங் கேளோங் கற்றேரே.**

(இ-ள்) வியூகம் அமைத்து நால்வகைச் சேனைகளால் யுத்தம் புரியும் பகையாகிய யானைகளுக்குச் சிங்கம் போன்றவனே! கொடுத்தலில் பஞ்ச தாருவுக்கு ஒப்பானவனே! எப்போதும் நீங்காத வளமிக்க இவ்வுலகைத் தாங்கும் குணக்குன்றே! பிணவன் என்னும் அரசனே! என்றெல்லாம் சொல்லித் துதியாதவர் வாயைப் பிளந்து பெருகிடும் இரத்தத்தைப் பூதகணங்களின் வாயில் நிரப்பும் செங்குந்தத் தலைவனைப் போலும் வீரனைப் புலவர்களாகிய யாம் கண்ணுற் கண்டதுமில்லை. காதாற் கேட்டதுமில்லை.

விளக்கம் : இப்பிணவன் கடம்பூரை ஆண்ட கதம்பன் என்பவனின் புதல்வன். ஒருநாள் சோலைக் காட்சி காணச் சென்ற பிணவன், ஒரு முயலைத் துரத்தி வரும் வேடராசனைக் கண்டான். முயலை ஒன்றும் செய்ய வேண்டாம் என்று வேடராசனைக் கேட்டுக் கொண்டான். அதற்கு இணங்காத மன்னன் மேல் கோபம் கொண்டு போர் செய்து வென்றான். முயலுக்குக் கருணை காட்டிய முடி மன்னன் பிணவன் வீரத்திலும் சிறந்தோன் என் பதை வல்லான் காவியம் தேவசாட்சிச் சருக்கம் கூறும்.

## கண்டியூரன் சிறப்பு

**மிண்டிடா மண் மேவலீர் விளம்பிடாம லோருமின்**
**ெறண்டிடாமல் வாழ்வதெங்ஙன் சூரபன்மன் பட்டிடக்**
**கண்ட வீரவாகு தேவர் கால்வருங் குலத்துமன்**
**வண்டுலாவு கண்டியூரன் வயிரவாகு குந்தமே.**

(இ-ள்) பகைவர்களே! சூரபதுமனைக் கொன்ற வீரவாகு தேவரின் சந்ததி வழியாக வந்த வண்டுகள் பாடும் கடப்ப மாலையையுடைய கண்டியூரன் கையிலுள்ள அழகிய குந்தத்தை எதிர்க்காமலும், வீணை வம்பு வார்த்தைகள் பேசாமலும் இருங்கள். அவனுக்கு அடிமை செய்யாதிருப்பது யாங்ஙனம்? ஆகையால் வணங்கிப் பிழைத்துக் கொள்ளுங்கள்.

இப்பாட்டில் வரும் கண்டியூரன் என்பவன் அட்ட வீரத்தலத்திலொன்ருகிய திருக்கண்டியூரை அரசாண்ட விபுலன் என்னும் வேந்தன் மகனுவான். மதுகையான் என்றும் இவனை அழைப்பர். கண்டியூருக்கு வடக்கே ஒரு காட்டில் பிரமராக்கதன் என்னும் ஒரு கொடியவன் இருந்தான். அவனைத் தன் குந்தப் படையால் வெற்றி கண்டு விண்ணுலகனுப்பினுன்.

வீரவாகு தேவர் கால் வருங் குலத்துமன் என்று செங்குந்தர் குடியின் பிறப்பு, வளர்ச்சியினைக் குறிக்கின்ருர். வீரவாகு தேவர் தொடங்கி முசுகுந்த சக்கரவர்த்தி வழிகால் கொண்டு எழுபத்திரண்டு நாடுகளில் பரவி எழுபத்திரண்டு சிற்றரசர்களாகச் சிறந்து கிளை விட்ட பெரும் இனத்தார் செங்குந்தராவார். கிழக்கே சிவபுரமும், தெற்கே தொந்திபுரமும், மேற்கே விரிஞ்சிபுரமும், வடக்கே சோழசிங்கபுரமும் இக்குடிக்குரிய நாடுகளாக விளங்கின. விரிஞ்சிபுர நாட்டின் கிளை நாடுகளில் ஒன்றுதான் தாரமங்கலம்.

## முதுகுன்ற மணியன் சிறப்பு

**மூத்த முதுகுன்ற குரிசின் முதிரு மணவைப் பாராளன்**
**பாத்த னென்னு மணியன் கைக்குந்தங் கொடுத்துப் பகரவே**
**பூத்த மார்பத் தார்பறித்துப் பூழிபடவே வீழ்ந்திறைஞ்சிக்**
**கோத்து செங்கை மலர்கூப்பிக் குறுகார் சிறுகி வரக்கண்டான்.**

(இ-ள்) முதுகுன்றத்தில் வாழ்ந்த மன்னனும், மணவை என்னும் நகரத்தில் வாழ்ந்த மன்னனும் பகைவர்களால் துன்பமடைந்து முதுமையில் அர்ச்சுனனுக்குச் சமமான மணியன் என்னும் பிள்ளை கையில் செங்குந்தம் கொடுத்து வெற்றி பெறுக என்று சொன்ன மாத்திரத்தில், பகைவர் தங்கள் பரந்த மார்பில் உள்ள வெற்றி மாலைகளைக் கழற்றி எறிந்து, புழுதி உடலில் படும்படியாக மண்ணில் வீழ்ந்து வணங்கி தாமரை மலர் போன்ற தமதிரு கைகளையும் குவித்துக் கொள்ள வீரம் காட்டினுன்.

இப்பாட்டில் சொல்லப்படும் முதுகுன்ற மணியன் என்பவன் திருமுதுக்குன்றமாகிய விருத்தாசலத்தை ஆண்ட மன்னன். பாராயணன் என்பானது திருமகன். இளமையிலேயே பட்டத்துக்கு வந்தவன். மணவூர் தேச மன்னன் வேண்டுகோட்படி மாளவ தேசத்து அரசன் மேல் படையெடுத்துச் சென்று வென்றவன் எனும் செய்திகளை வல்லான் காவியம் தேவசாட்சி சருக்கம் கூறும்.

## தஞ்சை வேம்பன் சிறப்பு

**பஞ்சம் வெம்பத் தரும்பனையே நாவான் மிகவே பாடாது**
**தஞ்சை வேம்பனைப் புகழ்ந்தே மதுமுன் செய்த தவமேயாம்**
**எஞ்ச வெளிதோ வூழியுருத்திரன் கைக்கொளு மூவிலைவேலே**
**வஞ்ச மாயை அவதரித்த திவன் கைக்குந்த வரவாமல்.**

(இ-ள்) ஏழைகளின் வறுமை நீங்கக் கொடுக்கின்ற பணமாலையையுடைய சேரனை எமது நாவால் பாடோம். தஞ்சை வேம்பன் என்னும் தலைவனைப் பாடுவோம். அது யாம் செய்த தவம். அத்தவத்தைக் குறைவுபடச் சொல்லல் எளிதோ? இவன் கையிலுள்ள வஞ்சமே உருவமான மாயை அவதாரம் செய்து வந்த குந்தத்தின் வரவானது ஊழிக் காலத்து உருத்திரன் கையிலுள்ள மூவிலை வடிவத்தைப் போன்ற முத்தலைச் சூலாயுதமே.

இப்பாட்டில் கூறப்பட்ட வேம்பன் என்பான் தஞ்சையைத் தலைநகரமாகக் கொண்டவன். திருவை யாற்றில் வசித்த குமரன் என்பானின் திருமகன். ஐயாறப்பனின் தரும பரிபாலனக் கூட்டத் தலைவன். பராந்தகச் சோழன் நீதி மன்றத்தில் முதல் மந்திரியாக இருந்தவன். வல்லான் என்னும் இரட்டனை வென்று வாகை சூடிய பன்னிருவருள் ஒருவன் என்று வல்லான் காவியம் வீரநாராயணச் சருக்கம் கூறுகிறது.

## மங்கலியப் பிச்சையிட்ட சிறப்பு

வல்லான்றன் திருத்தேவி மங்கலியம்
பிழையாமன் மடிதா னேற்றிங்
கெல்லோரு மங்கலியப் பிட்சையிடு
மெனத்தாள்வீழ்ந் திரப்ப வேண்டிக்
கொல்லாமல் விடுதல்புக ழெனக்கருதி
யோகற்பின் கொண்ட வாய்மை
நல்லார்க ளிருந்தவையின் புகழ்கைக்கோ
காத்ததுகொ னஞ்செங் குந்தம்.

(இ-ள்) சோழ ராசனோடு மாறுபட்டு வீரன் நாராய ணன் முதலிய செங்குந்தத் தலைவர்கள் பன்னிருவரால் தோல்வியடைந்து, அவர்கள் கையில் அகப்பட்டுத் தன்

உயிர் கொடுக்க இருந்த வல்லான் என்னும் அரசனது மனைவி அனங்கவல்லி என்பவள் அச் சமயத்தில் முந்தானையேற்று நான் அமங்கலியாகாமல் நீவிரெல்லாரும் மங்கலியப் பிட்சை கொடுக்க வேண்டும் என்று அவர்கள் பாதத்தில் வீழ்ந்து வணங்க, செங்குந்தத் தலைவர்கள் அவ்வல்லானுக்கு உயிர் கொடுத்துக் காத்தது புகழ் எனக் கருதியோ அல்லது கற்பினது உண்மையையே மேற்கொண்டொழுகிய மாதர்கள் இருந்த சபையின்கண் தம்மைத் துதிப்பதற்கோ அறியேன்.

விளக்கம் : தன் கணவனைக் கொல்ல செங்குந்தத் தலைவர்கள் முற்பட்டபோது என் உடன் பிறந்தவர் நீங்கள், யானுங்கள் சகோதரி. என் மங்கல நாண் அறுபடலாமா என்று கேட்பாள். அவ்வாறு மங்கலியப் பிச்சை கேட்டதும், வீரனின் ஓங்கிய கரம் நின்றது.

இரட்டன் மரபார் இன்றைக்கும் தங்கள் கல்யாண காலத்தில் இச் சரித்திரம் விளங்க பன்னிரு குடுவைப் பொங்கல் வைத்து வழிபாடு புரிகின்றனர்.

## உயிர்க் கொடை சிறப்பு

**எல்லாக்கா லத்தினுமொன் றேற்பவருக் கில்லையெனுஞ்**
**சொலலானது கற்றுஞ் சொலலறியா ரேந்து குந்தம்**
**வல்லானைக் கொல்லாமன் மனைவிக்கு மங்கலியம்**
**உல்லாசத் துடனளிக்கும் முதலியதொன் றறிந்தேமால்.**

(இ-ள்) இச் செங்குந்தத் தலைவர்கள் எக்காலத்தும் கேட்பவருக்கு ஒரு பொருளை இல்லை என்று சொல்லும் சொல்லை நாவினுல் சொல்ல அறியாதவர். இது வல்லான் என்னும் கொடிய துட்டன் பிடிபட்டபோது

அவன் மனைவி அனங்கவல்லி இரந்து கேட்க அவனைக் கொல்லாமல் மகிழ்ச்சியோடு உயிர்ப் பிச்சை கொடுத்த செயலினால் அறிந்து கொள்ளலாம்.

விளக்கம்: சோதனைக் காலத்தேதான் ஒருவரது இயல்பு தெரியவரும். வல்லானைக் கொல்லாமல் விட்டது அவன் மனைவிமீது கொண்ட இரக்கம் மட்டு மல்லாது தங்கட்கே உரிய கொடைக் குணமும்தான் என்பதனை அந்நிகழ்ச்சி வாயிலாக அறிகின்றோம்.

## மெய்த்தலை கொடுத்த சிறப்பு

முத்தமி ழிராசரா சேந்திரன் முன்னமே
சுத்தவீ ரத்திறந் துலங்கு தற்கொரு
பொய்த்தலை கொடுத்தலிற் புகழ்பெறுதென
மெய்த்தலை கொடுத்தன வீரக் குந்தமே.

(இ-ள்) குந்தப் படையை உடைய வீர நாராயணன் என்னும் செங்குந்தத் தலைவர்கள் முத்தமிழிலும் வல்ல இராச ராசேந்திரனாகிய பராந்தகச் சோழன் முன்பு தூய்மையான தங்கள் வீரம் துலங்க வல்லானின் ஒரு பொய்யான தலையையா கொடுப்பது என்று கருதி தங்க ளிருவருடைய மெய்யான தலைகளையே கொடுத்தனர்.

58, 59, 60—ம் பாடல்களில் உள்ள வரலாறு.

வட நாட்டில் நல்லூர் என்னும் நகரத்தில் போகன் என்னும் இரட்டனுக்கு மகனாகப் பிறந்தவன் வல்லான். வரங்கள் பல தவம் செய்து பெற்றவன். பல ஊர் களில் வாழ்ந்து இறுதியில் தென்னாட்டில் கடம்பூர் வந்தான். ஆழமான அகழியின் மத்தியில் இரும்புத் தூண் நாட்டி அதன்மேல் கோட்டை கட்டி வாழ்ந்தான். எல்லாருக்கும் துன்பமே புரிந்தவன். சோழ மன்னன்

பராந்தகனுக்கு அடங்காதவன். அனங்கவல்லி என்னும் மங்கை நல்லாளை மணந்து வந்தவன்.

இவனை அடக்க பழுவைவீரன் முதலிய பன்னிருவர் துணையைச் சோழன் நாடினான். அவ்வீரர்கள் வல்லானை வென்று வருவதாகச் சோழன் சபையில் சபதம் செய்து கொண்டனர். தங்களுக்குள் எவரேனும் இறந்துபோனால் மற்றையரும் உயிர் வாழ்வதில்லை என்று கட்டுப்பாடும் செய்து கொண்டனர்.

வல்லானை அடக்கப் புறப்பட்ட அவர்களுள் கச்சித் தனியன் துர்க்கா தேவிக்கும் ஒற்றியூரன் காளிதேவிக்கும் பலியாயினர். முதுகுன்ற மணியனும் கோளாந்தகனும் தாமே உயிர் நீங்கி அகழியைக் கடக்கத் தெப்பமாயினர். புற்றிடங்கொண்டான் செந்நாய்களுக்கும், களந்தையான் புலிக் கூட்டங்களுக்கும் புலியூர்ப் பள்ளி கொண்டான் சிங்கங்களுக்கும் துணிந்து ஆகாரமாயினர். பிணவன் தன்னுயிரை விட்டு அக்கினியாற்றைக் கடந்து செல்ல தெப்பமாயினான். கண்டியூரன் ஏரியிலுள்ள முதலைகளுக்கு தனது மாமிசம் உணவாக ஏரியைக் கடக்கத் தோல் துருத்தியாக உபயோகப்பட உயிர் துறந்தான். தஞ்சை வேம்பன் வழவழப்பான தூணில் மணலும் இரத்தமும் பூசி மற்றிருவர் ஏறிச் செல்ல துணிந்து உயிரைக் கொடுத்தான். எஞ்சிய பழுவை வீரன் நாராயணன் என்னும் இருவரும் அத் தூணின் வழியாகச் சென்று வல்லான் மார்பை இடமாகக் கொண்டனர். அப்போது அவன் செயலற்றிருந்தான்.

அதுகண்ட வல்லான் மனைவியாகிய அனங்கவல்லி தனது கணவனைக் கொல்ல மார்பில் ஏறியுள்ள வீரர்களை நோக்கி மாங்கலியப் பிச்சைக் கொடுத்துதவ வேண்

டும் என்று முந்தானையைக் கையிற்கொண்டு நின்றாள். உடனே வீர நாராயணர் அவள் விரும்பியபடியே மாங் கலியப் பிச்சை கொடுத்தருளி வல்லானுக்கு வேண்டிய நல்லறிவு புகட்டி அவனை அவன் பிறந்த ஊருக்குப் போகும்படி கட்டளையும் கொடுத்தனர். பிறகு வல்லா னும் அவன் மனைவியும் 'அவ்வீரர்களை வாழ்த்தி வணங்கி மகிழ்வுடன் தங்கள் ஊர் போய்ச் சேர்ந்தனர். வெற்றி கண்ட வீர நாராயணர் பராந்தகச் சோழன் மன்றம் வந்தனர்.

மன்னன் அவ்வீரர்களைப் பார்த்து என் பகைவ னாகிய விக்கலன் தலையை எவ்வாறு கொய்தீர்! என்று கேட்டான். உடனே அவ்வீரர் இருவரும் இவ்வாறு தான் வெட்டினோம் என்று தங்கள் தலைகளை வெட்டிக் கொண்டனர். அது கண்ட சோழன் இப்பழி நம்மையே சாரும். உயிரைப் போக்கிக் கொள்வதே நீதியாம் என்று உடைவாளைக் கையில் எடுத்தான். அத்தருணம் அறுமுகக் கடவுள் எழுந்தருளி மன்னவனே! உன்னால் சரீரம் நீங்கி உயிர் விட்டவர்கள் பிழைப்பார்கள். நீ சிறிதும் அச்சம் அடைய வேண்டாம் என்றுரைத்து மறைந்தார். மாண்டவர் பன்னிருவரும் மீண்டனர். மன்னவன் இத்தியாகச் செம்மல்களுக்கு வரிசைகள் நல்கினான். வல்லானை வென்ற பன்னிரு வீரர்களும் முருகப் பெருமான் திருவருளை எண்ணி வணங்கிய பின் தங்கள் தங்கள் இருப்பிடம் சென்றனர்.

## சாவான் கல் சிறப்பு

பைந்தமிழ்க் காவலர் பகரும் பாடலார்
கந்தவே டான்மகிழ் கைலைக் காவலார்
வந்தவீ ரப்படைத் தலைவர் வந்துழிச்
சிந்தவே கழுத்துடற் செகுத்த குந்தமே.

(இ-ள்) செந்தமிழ்ப் புலவர்களால் செய்த பாடலைப் பொருந்திய முருகக் கடவுள் மகிழ்ந்து எழுந்தருளியிருக்கும் திருக் கைலாய மலைக்குக் காவலராகிய நவ வீரர்கள் சந்ததியில் வந்த வீரம்மிக்க செங்குந்தத் தலைவர்கள், சமயம் வந்தபோது தமது உயிரையும் ஒரு பொருளாக எண்ணுமல் கைக்குந்தத்தால் தம் உடலினின்றும் கழுத்து சிந்தும்படி அரிந்த்வராவார்.

விளக்கம் : முருகப்பெருமான் செந்தமிழ்ப் பனுவல் சிறக்கச் செய்யும் சீரிய செந்தில் வேலன் என்பது காட்ட 'பைந்தமிழ்ப் பாவலர் பகரும் பாடலார்' என்ருர். செங்குந்தத் தலைவர்களில் ஒரு பகுதியினர் வீராவேசம் கொண்டு தங்கள் தங்கள் தலைகளை அறுத்து சாவான் கல் இட்டிருத்தலைப் பல இடங்களில் பார்க்கலாம். தார மங்கலம் திருக்கோவிலில் இத்தகு சிற்பம் கோபுரத்திற்கு அருகில் உள்ளது.

## புலிக் கொடி நிலையிட்ட சிறப்பு

**தில்லை மூதூர் நடஞ்செய்யும் ஆலயத்**
**தொல்லையிற் பொறித்திடு முழுவை முத்திரை**
**யெல்லையி னுவலொன் பதின்மர்க் காக்கியோர்**
**வல்லயிற் றுணையொடு மருவுங் குந்தமே.**

(இ-ள்) நடராசப் பெருமான் திருநடனம் புரிகின்ற சிதம்பரம் நகரத்தில் பழமைக் காலத்தில் அரசாட்சி செய்து வந்த நவ வீரர்களது கொடியில் தீட்டிய புலி முத்திரையானது அளவிலா விரிவு கொண்ட நாவலந் தீவு முழுமையும் செல்லும்படி செய்வித்தது. அச் செய் வித்தது எதுவெனில் ஒப்பற்ற வல்லமை கொண்ட வேலின் துணையாகிய செங்குந்தமே.

விளக்கம் : நவ வீரருள் ஒருவர் சிதம்பரம் கோவில் தரும பரிபாலனம் புரியவேண்டி அவ்வூரை ஆண்டு வந்தார் என்பது செய்தி.

## பரணி கொண்ட சிறப்பு

**எந்தையா மம்மை பாகத்திறைவனை வணங்கி யானே**
**பைந்தமிழ்ப் பரணி செய்த பாடலோ டந்தமாக**
**வந்தமா மடவா ராட யரியணை இருந்த வீரர்**
**குந்தமே குந்தம் வேறு குந்தமும் உளதோ கூற.**

(இ-ள்) உமையொரு பாகத்திறைவனும் எம் தந்தையை வணங்கி யானே பைந் தமிழால் கூறிய பரணி என்னும் பிரபந்தப் பாடலை, அபிநய இலக்கணத் தோடு அழகிய மாதர்கள் நர்த்தனம் செய்ய சிங்கா தனத்தில் எழுந்தருளி இருந்து கேட்டு மகிழ்ந்த செங் குந்தத் தலைவர்கள் கையிலுள்ள குந்தமே குந்தம். இதற்கு நிகராக வேறு குந்தம் உலகில் உளதோ?

விளக்கம் : ஒட்டக்கூத்தர் பாடிய தக்கயாகப் பரணியைச் செங்குந்தர்கள், அபிநய இலக்கணத்தோடு அழகிய மாதர் நடனமிட சிம்மாசனத்திருந்து கேட்டு மகிழ்ந்தனர் என்பதால் நூல்களின்மேல் எந்த அளவு பற்றுக் கொண்டிருந்தனர் என்பதனை அறிந்துகொள்ள முடிகிறது.

## சிரச் சிங்காதனச் சிறப்பு

**வரச்சிங் காதன வளவர் தம்பிரான்**
**தரச்சிங் காதனந் தன்னி லேறியே**
**துரைச்சிங் காதனந் தொழுங்க வீக்கிடும்**
**சிரச்சிங் காதனச் சீர்செங் குந்தமே.**

(இ-ள்) முசுகுந்த மன்னன் பெரும் தவம் செய்து பெற்ற சிங்காதனத்தை உடைய சோழராசர்களுக்கெல்லாம் தலைவனாகிய குலோத்துங்கன், சிங்காதனத் துரைகள் வணங்க வீற்றிருந்த கவிஞனாகிய எனக்கு ஆயிரத்தெட்டுத் தலைகளாகிய சிங்காதனமிட்டுச் சிறப்பு செய்தோர் செங்குந்தத் தலைவராவார்.

விளக்கம்: சோழ பரம்பரை முசுகுந்தன் செய்த பெருந்தவத்தால் உருவானது. அதில் வந்த குலோத்துங்கன் கூத்தருக்குச் சிங்காதன வரிசை செய்து சிறப்பித்தான். அம்மன்னன் தந்த சிங்காதனத்தைவிட, செங்குந்தர் தந்தது சிறப்பானது என்பது கூத்தர் கருத்து.

**சிரச் சிங்காதனக் காரணச் சிறப்பு**

**வேட்டுமா ஞடரி தாய வேணியர்**
**சூட்டுதாள் வாரிசத் துணைக ளேத்தியே**
**யாட்டுக சென்னியை யலர்த்தி யேயெனக்**
**காட்டுதற் கேயரி கவின்கைக் குந்தமே.**

(இ-ள்) திருமாலானவர் திருவடிகளைக் காண வராக அவதாரம் செய்து பூமியைப் பிளந்து தேடியும் காணுதற்கரிய சடா முடியை உடைய பரமசிவன் தாமரை போன்ற திருவடிகளைத் தோத்திரம் செய்து உலகத்தாரைப் பார்த்து நீங்கள் முகமலர்ந்து சிரக்கம்பனம் பண்ணுங்கள் என்று தங்கள் வீரத்தைக் காட்டுதற்கே தலையரிந்து சிங்காதனமிட்டனர் இச் செங்குந்தர்.

திருமாலும் காண அரிய திருவடியை, செங்குந்தர் தங்கள் நெஞ்சத்தில் அடக்கிக் கொண்டதோடு மட்டுமன்று அவனருளும் பெற்றவர் என்பது இப்பாடல் உணர்த்துகிறது.

## பிரமகத்தி யொழித்த சிறப்பு

விண்டு வேதனு நாடரி தாகிய விமலன்
பண்டு தாருகப் பிரமகத்திப் பழிபோகக்
கொண்டு தாமெனக் கடுகியே குடிவழித் தொன்மை
கண்டு தாங்கழுத் தரிந்தது கவின்கவின் குந்தம்.

பிரமனும் தேடிக் காண அரிதாகிய பரமசிவனுக்கு முன்பு தாருகவனத்தில் உண்டான பிரமகத்திப் பழியை அழகிய செங்குந்தத் தலைவர்கள் அறிந்து அதை நீக்க வந்தவர் தாமே எனக் கருதி விரைந்து சென்று தங்கள் தலையை அரிந்து கொண்டது மிகவும் அற்புதமானதாகும்.

ஐந்து தலை கொண்ட பிரமன் கர்வத்தை அடக்க அவனுடைய ஐந்தாவது தலை கொய்தமையால் இறைவனுக்குப் பழி வந்தது. அப்பழி நீக்கக் கையிலுள்ள கபாலத்தில் இரத்தத்தை நிரப்பிய கடவுள் வர்க்கத்தவருள் நவ வீரரும் ஒருவர் என்பதால் குடிவழித் தொன்மைச் சிறப்பு சுட்டப்பட்டது.

## குந்தப் பூசைச் சிறப்பு

தவந்தனிச் செய்வதென் றலைச் சிங்காதனம்
உவந்தபா வாடையிட் டோடுஞ் சோரிமேல்
நவந்தனிற் பாடிய நங் கவித்திறஞ்
சிவந்திடச் செய்தது திருச்செங் குந்தமே.

(இ-ள்) செங்குந்தத் தலைவர்கள் உவப்போடு ஆயிரத் தெட்டுத் தலைகளை வெட்டிச் சிங்காதனம் செய்து இரத்தப் பாவாடையிட்டு அதனின்றும் ஓடும்

இரத்த வெள்ளத்தின் மீதிருந்து புதுமையாகப் பாடிய நமது கவியினது மகத்துவம் பெருமைப்படச் செய்தது இச் செங்குந்தம். ஆகவே உலகோரே! இச் செங்குந்தத்தை வழிபடாது பாசபந்தம் முதலியன துறந்து தனியாக இருந்து தவஞ் செய்ய வேண்டுவதென்ன?

விளக்கம் : சிரச்சிங்காதனம் செய்து முடித்து இறந்தவர் உயிர் பெற்றெழுந்தனர் என்பதால் இந்நூல் தெய்வீகம் கொண்டது என்பது புலனாகும். ஆகவே இது பாடவே தவம் வந்து சேரும்.

## குந்தத் திறச் சிறப்பு

**வீணுக் கே ருத வாய்மை விளம்பிடா வெற்றி யாளர்**
**ஆணுக் கே ருய்ப் பிறந்தோ ரடுபுலிப் பதாகை மன்னர்**
**நாணுக் கே ருத சாப நாட்டியே யிறுத்த மாறன்**
**மாணுக் கே ருத மாற்ரு ரடைத்திட மருவுங் குந்தம்.**

(இ-ள்) வீணான வல்லமையை தம் வாயால் எடுத்துச் சொல்லாத வெற்றிப் பாட்டினை உடையவரும், ஆண்களுக்கே உரிய சிங்கம் போன்ற வலிமையோடு தோன்றி புலிக் கொடியைக் கொண்டவரும் ஆகிய செங்குந்த அரசர்கள் கையின்கண்ணுள்ள பகைவர்களைச் சரணாகதி அடைய வைக்கும் குந்தம், நாணேற்றி விடுதற்கு வளையாத இராமபிரானின் கைவேலைவிட பெருமை மிக்கது.

விளக்கம் : வீணான சொற்களை விளம்பாத திறமுடையார் என்பது காட்ட 'வீணுக்கேருத வாய்மை விளம்பிடா' என்றுரைத்தார்.

## உலகம் புகழ்ந்த சிறப்பு

வட்டமா ரவையுழை வந்த மேலவர்
இட்ட பாவாடை கண்டிசை பெறாது மண்
முட்டவந் துயிர்பெறீஇ ழொய்த்து ளேமெனக்
கட்டுள குந்தர்சீர் கழறி யேத்தினார்.

(இ-ள்) வட்டமான இச் சபையின்கண் வந்த மேலவர் இச் செங்குந்தத் தலைவர் பிரபந்தம் கேட்க அம்பலக் கூத்தனாகிய நமக்குச் செய்வித்த சிரச்சிங்காதனத்தோடு இரத்தப் பாவாடையைக் கண்டு, நாம் இவ்வுலக முழுதும் பல குலங்களில் பிறந்து வந்தும் இத்தகைய புகழைக் கொள்ளாது உயிர் மட்டும் தரித்து இருக்கின்றோமே, இது ஏன் என்று சொல்லி செங்குந்தர் சிறப்புக்களை எடுத்துச் சொல்லித் துதித்தனர்.

உலகில் உள்ள ஏனைய மக்கள் செங்குந்தர்களைப் பாராட்டினர். ஏனெனில் நூலொன்று உருவாக தங்களையே தியாகம் செய்த சிறப்பு நோக்கி, எனக் காரணத்தோடு கூறப்பட்டது. இப் பெருமை நமக்கு இல்லையே என்ற ஏக்கமும் தெரிகிறது.

## குந்தத் தலைவர் சிறப்பு

**செந்தமிழ்க் காகபோந்து சிவந்தபா வாடை யாக**
**நந்தமக் கிடுங் காலெந்த நகரமு முளம் வியந்த**
**அந்தரத் தமரர் வாழ்த்தி அணிமலர் மாரிபெய்தார்**
**இந்தசெங் குந்தர் பெற்ற இசையெவர் பெற்றாரம்மா.**

(இ-ள்) குற்றமிலா இவ் வீட்டியெழுபது என்னும் நூலைப் பெறும் பொருட்டு கூத்தனாகிய நமக்கு சிரச்சிங் காதனமும் இரத்தப் பாவாடையும் இட்டதை அறிந்த எந்நகரத்தாரும் பெரிதும் மகிழ்வு கொண்டனர்.

இந் நிகழ்ச்சி கண்டு தேவர்கள் நீடுழி வாழ்க என்று வாழ்த்தி மலர்மாரி பொழிந்தனர். இத்தகு புகழைப் பெற்ற செங்குந்தர் போல வேறு எவர் பெற்றார்?

விளக்கம் : செந்தமிழுக்காகத் தியாகம் செய்த சிறப்பை அந்தரத்துத் தேவரும் போற்றினர். இந்தச் சிறப்பு வேறு எவர்க்கு உண்டு? என்றார்.

## குந்தத்தின் பெருமை கூறற் பாலார் சிறப்பு

**அம்பர்நாட் டமர்ந்த குந்த மயனரியரன் மூன்றென்னும்**
**உம்பர் தாமறிய வேண்டு முயர்ந்தமுத் தமிழினாலே**
**கும்பசம் பவனே தேர்ந்து கூறவே வேண்டு மல்லால்**
**இம்பர் யாங்கூற வேண்டு மெவர் மற்றுங் கூறுவாரே.**

(இ-ள்) திருக்கைலாய மென்னும் அந்த உலகில் எழுந்தருளியுள்ள நவ வீரர்கள் கையின் கண்ணுள்ள குந்தத்தின் பெருமையை அயன் அரி அரன் என்னும் மும்மூர்த்திகளே அறியவேண்டும். அல்லது அகத்தியனே ஆராய்ந்து முத்தமிழால் சொல்ல வேண்டும். அல்லது அம்பலக் கூத்தனாகிய யாம் சொல்ல வேண்டும். இஃதன்றி வேறு யார் கூறமுடியும்?

விளக்கம் : தெய்வீகத் தன்மை பொருந்திய குந்தத்தின் பெருமையைத் தெய்வீகக் கவிகளால் மட்டுமே

சொல்ல முடியும். அத்தன்மையோர் தேவலோகத்துப் பெரும் புலவர்களும், அகத்திய மாமணியும், உயர்ந் தோங்கிய சிறப்பு கொண்ட ஒட்டக்கூத்தனும் மட்டுமே யாவர். அவர்களாலே கூறப்பட்டால்தான் சிறப்பாக இருக்கும் என்று கூறினர்.

ஈட்டியெழுபது பாட்டும் உரையும்

முற்றிற்று.

சங்கம் வைத்து தமிழ் வளர்த்த தமிழ் நாடு. இன்றும் அதன் பெருமை குன்றாமல் ஊர்தோறும் சங்கம் மணக்கிறது.

தாரமங்கலம் தமிழ்ச் சங்கம் அவ்வகையில் புதுமை படைக்க எண்ணுகிறது. ஆண்டுதோறும் பழந்தமிழ் நூல்களை அச்சு வாகனம் ஏற்றுவதில் மகிழ்வு கொள்கிறது.

சித்திரை விழா ஒரு வகையில் சிறப்பு.

முத்திரை நூல் பதிப்பு இன்னொரு வகைச் சிறப்பு.

அதன் பணிக்குக் கைகொடுங்கள்.

மூவேந்தர் அச்சகம், சென்னை - 600 014.